# நூல் அறிமுகம்

நூலின் பெயர் : **வெளிச்சத்திற்கு வாங்க-3**

நூல் ஆசிரியர் : விசு அய்யர்

எழுத்து : 11 புள்ளி

முதற் பதிப்பு : 2023

உரிமை : ஆசிரியருக்கு

கணினி அச்சு : மணி பதிப்பகம்

பக்கம் : 96

மதிப்பு : இந்திய ரூபாயில் ரூ.75

# மதிப்புரை

வெளிச்சத்திற்கு வாங்க என்ற இந்த தொடரின் மூன்றாம் பகுதிக்கும் மதிப்புரை வழங்க வாய்ப்பு கொடுத்த நூல் ஆசிரியருக்கு மீண்டும் ஒரு நன்றியை பதிவு செய்கிறேன்.



**R. Manikandan,** B.Com.
Treasurer, arulalayam

இன்னமும் நான் வெளிச்சத்திற்கு வரவில்லை என இந்த வாய்ப்பு கிடைத்து இருக்கிறதா...? வெளிச்சத்திற்கு வந்து விட்டேன் என இந்த வாய்ப்பு கிடைத்து உள்ளதா என தெரியவில்லை. ஆனாலும் இதன் நான்காம் பகுதிக்கும் நானே மதிப்புரை வழங்க வேண்டும் என்ற ஆவல் எனக்குள் வந்துள்ளது.

இந்த நூலாசிரியர் விசு அய்யர் அவர்களிடம் கேட்பதற்கு ஒரு கேள்வி இருக்கிறது. உங்களுக்கு மட்டும் எப்படி இயல்பான சிந்தனையில் இருந்து ஒரு ஆழமான கருத்தை சொல்ல முடிகிறது? என்பது தான் அந்த கேள்வி.

சாதாரணமாக ஒரு சிந்தனையை பேசிக் கொண்டு இருந்தால் அதில் இருந்து ஒரு சோதிட சிந்தனையை எடுத்து அதைகட்டுரையாக்கி, அதை வெளியிடும் திறமை, ஒவ்வொரு படைப்புக்கு படைப்பு ஆர்வம் குறையாமல், சலிப்பு ஏற்படாமல், ஒரு முறை சொன்ன செய்திகளை வார்த்தைகளை மறுமுறை பயன்படுத்தாத வகையில் தன எண்ணங்களை பதிப்பிக்கும் என ஒவ்வொரு முறையும் பாராட்டி பதிவு செய்தே ஆக வேண்டும் என்பதில் மாற்றுக் கருத்து இல்லை.

ஒரு ஜாதகத்தை பார்த்தவுடன், எதிர்கால பலனை சொல்வது, இயல்பாக திறமை வாய்ந்த சோதிடர்கள் சொல்வது தான் என்றாலும், அவர் தம் குணம் வீடு, இயல்பான அசைவுகள் விருப்பு வெறுப்புகள் என சோதிடரை பற்றி முழுமையாக சொல்லி உறுதி செய்த பிறகு பலன் சொல்லும் பாணி வித்தியாசமானது தான். வியப்புக்குரியதும் தான்.

இவருடைய சோதிட சிந்தனைகளையும், கருத்துக்களையும், ஒரு சோதிட குழுவில் படித்து ரசித்து பழகியவன். இவருடன் பழகிய பிறகு இவர் பன்முக திறமையாளர் என அறிந்து மகிழ்ந்தேன்.

இந்த நூல் ஆசிரியரின் படைப்புகளில், வெளிச்சத்திற்கு வாங்க என்ற புத்தகத்தின் பாகம் 3 இப்போது புதிய பொலிவுடன் வருகிறது. இதன் தொடர் இன்னமும் வந்து கொண்டு இருப்பதால், அடுத்த பகுதியும் வரும். இது மக்கள் மத்தியில் பாராட்டை பெறுவது போல, நூல் ஆசிரியருக்கு, விருதையும் பெற்று தர வேண்டும் என விரும்புகிறேன். அப்படியே வேண்டுகிறேன்.

பால சோதிடம் என்ற வார இதழில் வெளியான தனது கட்டுரைகளை தொகுத்து ஒரு நூல் படைத்து இருக்கிறார். ஒவ்வொரு படைப்பிலும் வாசகர்களை வெளிச்சத்திற்கு அழைத்து செல்ல இவர் எடுத்த முயற்சி பாராட்டுக்குரியது. குறிப்பாக சந்திராஷ்டமம் குறித்து சொன்ன சோதிட கருத்துக்கள் நம்மை சிந்திக்க வைக்கிறது.

இது சோதிட சிந்தனைகளை சொல்லி வரும் புத்தகம், அதனால் சோதிடர்களுக்கு மட்டுமே பயன்தரும் என்ற நிலையில் இருந்து மாறி மற்றவர்களையும் சோதிடத்தின் மீது ஆர்வமும் ஈர்ப்பும் ஏற்படும் வகையில் இதனை படைத்து இருப்பது பாராட்டுக்குரியது.

தமக்கு என தனி பாணியை அமைத்துக்கொண்டு சிந்தனைகளை படைக்கும் இந்த நூல் ஆசிரியரின் அடியொட்டி, நானும் இன்று சோதிடம் படித்துக் கொண்டு இருப்பவன், ஒரு நூல் படைப்பேன் என்ற உறுதியை ஏற்படுத்தி தந்து உள்ளது இந்த வெளிச்சத்திற்கு வாங்க.

இந்த வெளிச்சத்திற்கு வாங்க பகுதி 3 வழக்கம் போல மக்கள் மத்தியில் பாராட்டுக்களை பெறும் என்று நம்பிக்கையுடன் மனம் நிறைந்த வாழ்த்துக்களை பதிவு செய்கிறேன்.

வாசகர்கள் இந்த புத்தகத்தை வாங்கி படித்து பயன் அடைந்து நூல் ஆசிரியரை ஊக்கப்படுத்த வேண்டும் என அன்புடன் விரும்புகிறேன்..

உங்கள்

maniiyer73@gmail.com

# என்னுரை

சோதிடம் எனபது கலை, சிலர் அதை தொழிலாகவும் செய்யலாம். தொழிலாக செய்தாலும் அது கலை என்பதில் எனக்கு மாற்றுக் கருத்து இல்லை.

சோதிட விதிகளையும், விதி விலக்குகளையும், எடுத்துக் கொண்டு ஜாதக ஆய்வு செய்து சொல்வது என்பதில் மாற்றுக் கருத்து இல்லை எனினும், இயல்பான நிலையில், ஆலோசனைக்கு வந்தவர்கள் மட்டும் அல்லாது, இயல்பான மன நிலையில் ஏற்றுக் கொள்ளும் விதமாக சொல்ல வேண்டும் என்பது ஒரு உத்தி.

தவறுகளை எல்லாம் சரியாக சொல்லும் இன்றைய மாறுபட்ட உலகில், சரியை சரியாக சொல்ல ஆள் இல்லாத நிலையில், சரியாக நாம் சொன்னால் odd man out என்பார்களே, அது போல, நாம் மட்டும் தனித்து நிற்கும்படி இருக்கும். அதற்காக நம்மை நாம் மாற்றிக் கொள்ள தேவையில்லை.

கூட்டத்தில் செல்லும் பாதையை விடுத்து, சரியான பாதையை தேர்ந்து எடுத்து இருளில் இருந்து அடுத்தவர்களை வெளிச்சத்திற்கு கொண்டு வர செய்ய வேண்டும் என்ற உத்தி, போராட்டமானது தான். படைக்கும் எழுத்திலும் சரி, சொல்ல வரும் சிந்தனையிலும் சரி, ஏற்கனவே சொல்லி பழக்கப்பட்ட மரபு மாறா வழக்கத்திலும் சரி என ஒரு பிரம்ம பிரயத்தனம் தான், இந்த வெளிச்சத்திற்கு வாங்க.

“வெளிச்சத்திற்கு வாங்க” என்ற தொடர் பால சோதிடம் வார இதழில் தொடராக வந்து கொண்டு இருக்கிறது. அந்த தொடரின் தொகுப்பே இந்த புத்தக வடிவமைப்பு. இதுவரை இரண்டு தொகுதிகள் வெளி வந்து விட்டன.

இந்த முயற்சியில் ஊக்கப்படுத்திய வாசக அன்பர்களுக்கும் சிந்தனைகளை நக்கீரன் குழுமத்தில் இருந்து வரும் பால சோதிடம் என்ற வார இதழில் வெளி வர செய்த பாலசோதிடம் ஆசிரியர் திரு.முருகு.பாலமுருகன் அவர்களுக்கும், நக்கீரன் குழுமத்திற்கும் நன்றிகளை பதிவு செய்கிறேன்.

ஒரு சிந்தனையை எடுத்து நூல் முழுவதும் தருவதற்கு பதிலாக , கட்டுரைக்கு ஒரு சிந்தனை என்று எடுத்து அதனை சோதிட குறிப்புகளுடன் இணைத்து செய்தது தான் இந்த “வெளிச்சத்திற்கு வாங்க” இது படிப்பவர்கள் ரசனை குறையாமல், சோர்வோ சலிப்போ ஒரு துளியும் ஏற்படாத வகையில் அமைத்து தந்துள்ளது.

இந்த நூல் வடிவைமப்பிலும், மின் நூலாக பதிப்பித்து தந்ததிலும் தன் ஆர்வத்தையும் நேரத்தையும் முழுமையாக நமக்காக தந்த மணி பதிப்பகத்தாருக்கு நெஞ்சம் நிறைந்த நன்றிகளை பதிவு செய்கிறேன்.

எனது அன்பு வேண்டுகோளை ஏற்று நூலிற்கு மதிப்புரை தந்த அருளாலயம் அமைப்பின் பொருளாளர் மும்பைத் தமிழர் திரு.மணிகண்டன் அவர்களுக்கு நெஞ்சம் நெகிழ்ந்த நன்றியையும் வாழ்த்துக்களையும் பதிவு செய்கிறேன்.

இந்த புத்தகம், அமேசான், விக்கி மீடியா மற்றும் ARCHIEVE மின் நூலகம் போன்ற தளங்களில் கிடைக்கும். 30க்கும் மேற்பட்ட நாடுகளில் அன்பு வாசகர்களை கொண்ட channel G என்ற podcast வானொலியில் தொடர் நிகழ்ச்சியாக ஆடியோவாகவும் கேட்டு பயன்பெறலாம்.

நமது நூல் படைப்பின் வரிசையில் இன்னொரு பதிப்பு என்ற ஆவலில் இந்த புத்தகத்தினை வழக்கம் போல வாங்கி படித்து பயன் பெற வேண்டும் என அன்பு வேண்டுகோளை வைக்கிறேன்.

பேரன்புடன்

**விசு அய்யர்**

iyervisuiyer@gmail.com

# “வெளிச்சத்திற்கு வாங்க...”

## -47-

“வீடு வாங்கலையோ.. வீடு...” என கூவி விற்குமளவுக்கு வீடுகள் மலிந்து கிடைக்கிறது. அதை வாங்க, பல வங்கிகள் போட்டி போட்டுக் கொண்டு கடன் தர .முன் வந்து நிற்கிறது.

ஏரிகள் எல்லாம் ஏரியாவாக போய்விட்டது. நீர் நிலை பகுதிகள் எல்லாம் மக்கள் குடியிருப்பு பகுதியாகி விட்டது.. தமிழகத்தில் சில இடங்களில் இது போல ஆகி வருகிறது

ஆறு, தாங்கல் கேணி என முடியும் பல பகுதிகள் இப்போது குடியிருப்பு ப்குதிகாளாகி விட்டது. இது போன்ற இடங்களை அடை”யாறு”, ஐயப்பன்‘தாங்கல்”, ஈக்காட்டு”தாங்கல்” திருவல்லிக்”கேணி” என சென்னையை சுற்றியே நிறைய காட்ட முடியும். இவையெல்லாம் ஒரு காலத்தில் நீர் நிலை பகுதிகளாக இருந்தவை தான் என்பது பலருக்கு தெரியாமலே இருப்பது தான் ஆச்சரியமான விஷயம்.

தவணையில் வாங்கிக்கோங்க.. எலி மனையானாலும் தனி மனை. என்ன சம்பாதிச்சு என்ன சார் ஒதுங்க ஒரு கூரை வேண்டாமா? என ஆளுக்கு ஆள் நம்மை வீடு வாங்க தூண்டுவாங்க.. “உங்கள் கனவு இல்லம்” என முக்கியமான நிகழ்ச்சியில் விளம்பரம் கொடுத்து ஆசையை தூண்டுவார்கள்.

இன்னமும் திருமணம் ஆகாதா இளைஞர்கள் மத்தியில் ஒரு குடை இருந்தால் தான் கல்யாணமே ஆகும் என்ற போலியான ஒரு

இருபது முதல் முப்பது வருடம் நிரந்தர கடன்காரனாக இருக்க யாராவது விரும்புவார்களா? என்று ஒரு நிமிடம் உங்களை கேட்டு பாருங்க.. உங்களுக்கே புரியும்.

இன்னு மனை விற்பவர்கள் இங்கே வாங்குங்கள் சார் பெரிய பஸ் ஸ்டாண்டு வர போகுது. மெட்ரோ ரயில் வருது, விமான நிலையம் வர போகுது அந்த பக்கம் காலேஜ், இந்த பக்கம் ஏடிஎம் என்று எதையெல்லாமோ சொல்லி ஐந்து வருடத்தில் இரண்டு மடங்காகும் என்று நம்மை நம்ப வைத்து தலையில் கட்டி விடுவார்கள்.

ஐந்து வருடத்தில் இரண்டு மடங்காகும் என்றால் அதை அவர்களே வைத்துக் கொண்டு ஐந்து வருடத்திற்கு பிறகு விற்று அதிக லாபம் சம்பாதிக்கலாம் தானே என்று கேட்டு பாருங்கள்.. அவர்கள் கிட்ட வர மாட்டார்கள்.

வீட்டு கடன் வாங்கினால் வருமான வரி சலுகை கிடைக்கும் அரசு தரும் வட்டி மானியம் கிடைக்கும். என்று தம்மாதுண்டு மானியம் அல்லது வரி கட்டுவதற்காக இம்மாம் பெரிய கடனை நம் தலையில் கட்டி விடுவார்கள்.

வீட்டுக்கு போடுகிற முதலீட்டை அது மாதாந்திர தவணையாக இருந்தாலும் சரி அதை வைத்து கணக்கிட்டு பார்த்தால், லாபம் இருக்காது அல்லது வங்கியில் கிடைக்கும் வட்டியை விட குறைவாக அல்லது மிக சொற்பமான லாபமே கிடைக்கும். அந்த பணத்தை வேறு நல்ல இடத்தில் முதலீடு செய்தால், பணப் புழக்கமும் இருக்கும் பண வளர்ச்சியும் இருக்கும்.

அதெல்லாம் சரி தாங்க ஆனாலும் சொந்தமாக வீடு

தெரியாமலோ, இது போன்ற கடனில் மாட்டிக் கொண்டு, சிலந்தி வலையில் விழுந்த ஈ போல வெளியே பறந்து வர முடியாமல் தன் உழைப்பு, நேரம், சம்பாத்தியம் அனைத்தையும் தியாகம் செய்வார்கள். மாடி வீட்டு ஏழை போல வாழ்வார்கள்.

ஒரு சிறிய அளவிலான வீட்டில், தன் கடன் அடையும் வரை முப்பது வருடம் வாழ வேண்டும் என்று சொன்னால் எப்படிங்க என்று யோசித்து பார்த்தால், நமக்கு வீடு வேண்டுமா என்ற கேள்விக்கு பதில் கிடைத்து விடும்.

பிதுர் ராஜ்ய சொத்து அதாங்க மூதாதையர் சொத்து என்றால் வேண்டாம் என்றா சொல்வார்கள்.. அது சரி அப்படின்னா ஜாதக படி வீடு வாங்குகிற யோகம் இருந்தால் வேண்டாம் என்றா சொல்வது என்று நீங்க கேட்க வருவது புரிகிறது.

ஜாதகப்படி நான்காம் வீடு அல்லது அந்த வீட்டின் அதிபதி, செவ்வாய் மற்றும் சனி இப்படி இருந்தால் வீடு யோகம் அமையும் என்பது பொதுவான விதி தான். இதில் சுக்கிரன் வந்து விட்டால் அடுக்கு மாடி வீடு சந்திரனுடன் பலமாக சேர்ந்து விட்டால் உயர் அடுக்கு மாடி என சொல்லிக்கொண்டு போகலாம்.

ஜாதகத்தில் நான்காம் மற்றும் பதினொன்றாம் வீடுகளுக்கு இடையே தொடர்பு இருந்தால் ஒன்றுக்கும் மேற்பட்ட வீடுகள் இருக்க வாய்ப்பு உள்ளது. இது போன்ற அமைப்பு உள்ள நபர்கள் ரியல் எஸ்டேட் தரகர்களாக கூட இருக்கலாம்.

சிலர் வீட்டுக்குள் நுழைந்ததும் சந்து போல நீளமாக போன பிறகு வீடு அமையும். இவர்களுக்கு கேது குடும்பஸ்தானத்தில் இருக்கும்.

வீடு வாங்கும் யோகம் மட்டும் இருந்தால் போதுமா? சௌபாக்கியம் வேண்டாமா? யோகம் இருந்தாலும் நட்பு கிரக சேர்க்கை பெற்று இருந்தால், சாதகமான சூழலில் சோதிட படி அமைந்தால் அது ஏறுமுகமாக இருக்கும்.

சிலருக்கு அரசு வீடுகள் அமையும் அவர்களுக்கு சூரியன் நான்காம் வீட்டில் அல்லது நான்காம் வீட்டின் அதிபதியின் மீது தனிச் செல்வாக்கு பெற்று இருக்கும்.

இதே போல பங்களா வீடு பக்கத்தில் யாரும் இல்லாத எந்த குடியிருப்பும் இல்லாத தனிமையான இடத்தில் வீடு என கூரை வீடு முதல் அடுக்கு மாடி வீடு வரை சொல்லி விடலாம்.

செவ்வாய், சனி, இதெல்லாம் சரி, இந்த நான்காம் வீட்டில் ராகு வந்து அமர்ந்து விட்டால் என்று கேட்க யோசிக்கிறீர்கள் புரிகிறது.

நான்காம் வீட்டில் மட்டும் அல்ல நான்காம் வீட்டின் அதிபதியுடன் தொடர்பு பெற்றால் கூட எதிர்பாராத விதமாக அவர்களுக்கு வீடு அமைந்து விடும். அது போன்ற அமைப்பு உள்ளவர்கள் அடிக்கடி வீட்டை புதுப்பித்தல், அல்லது பழுது பார்த்தல் என செலவு செய்து கொண்டே இருப்பார்கள்.

சொந்த வீடோ வாடகை வீடோ, ஒருவரின் வசிப்பிடம் எப்படி இருக்கிறது என்று ஜாதகத்தை பார்த்து சொல்லி விடலாம்.

எல்லாத்தையும் சொல்லிட்டீங்க ஐயா, ஆனால் பாருங்க இப்போ வீடு வாங்கனுமா வேண்டாமா என ஒரே குழப்பமாக இருக்கு என்று கேட்கறீங்களா...?

ஜாதக ரீதியில் பதில் சொல்ல வேண்டும் என்றால் கிரகஹ யோகம் அமையும் போது வீடு அமைந்து விடும் என்று சொல்லிவிடலாம், பொருளாதார ரீதியில் சொல்ல வேண்டும் என்றால் அதற்கு ஒரு thumb rule formulae இருக்கிறது. அதை போடட்டு சரி பார்த்து கொள்ளுங்கள். உங்கள் கேள்விக்கான விடை கிடைக்கும்.

நல்லதே நினைப்போம் நல்லதே நடக்கும்.

# -48-

“சார்.... எப்படி இருக்கீங்க..!!” என்று நீண்ட நாட்களுக்கு பிறகு சந்திப்பவர்களை கேட்டு நலம் விசாரிப்பது அந்த காலம்.. இந்த காலத்திலும் இது போன்ற குசலம் விசாரித்தல் இருக்கிறது. ஆனால், அது இப்படி இல்லை..

“என்ன சார்.. சர்க்கரை எவ்வளவு இருக்கு?” என்று கேட்கும் பழக்கம் நடைமுறைக்கு வந்து விட்டது. அவர்களுக்கு நம்மை விட சர்க்கரை மீது அக்கறை என்பது போல உங்களுக்கு தெரியலாம் என்றாலும் அன்புக்குரியவராக இருந்தால், இப்படி தான் அன்பை பகிர்ந்து கொள்வார்கள்.

அறிவியல் வளர்ந்தது போல மருத்துவமும் வளர்ந்து தான் இருக்கு, நோய்களும் அதை விட வளர்ந்து தான் இருக்கு. தொட்டால் கிருமி ஒட்டிக் கொள்ளும் என்ற பயமும் இன்றைய நாளில் இல்லாமல் இல்லை.

சரி, சோதிடத்தில் மருத்துவ சோதிடம் என சொல்வது போல, ஜாதகத்தை பார்த்து நோய் பற்றி சொல்ல முடியுமா? அந்த நோய் எப்படி வந்தது அல்லது எப்போது தீரும் என்று சொல்ல முடியுமா என்று கேட்க வரும் உங்கள் எண்ணம் புரிகிறது. அதை சொல்வதற்கு தான் இந்த வார பதிவு.

மருத்துவத்தை பொறுத்தவரையில், ஒரு குறிப்பிட்ட துறையில் உள்ள மருத்துவர்கள் அது பற்றி மட்டும் படிப்பார்கள். உதாரணமாக, கண் மருத்துவர் optholomogy பற்றியும், சிறுநீரக மருத்துவர் nephrology பற்றியும், cardiology பற்றி இதய நோய் மருத்துவரும் என வரிசையாக நிறைய சொல்லலாம்.

ஆனால் ஒரு மருத்துவ சோதிடத்தை கையில் தொட்டுவிட்டால் எல்லா துறையில் உள்ள மருத்துவ குறிப்புகளின் அடிப்படைகளையும் சொல்ல தெரிந்து இருக்க வேண்டும். இன்னும் கூடுதலாக சொல்ல வேண்டும் என்றால் மருத்துவத்துறையில் பயன் படுத்தும் சில அடிப்படை கலைச் சொற்களை கூட தெரிந்து இருக்க வேண்டும். உதாரணமாக, membarne, epithelium, edima, inflamation, mucus, என நிறைய சொல்லிக் கொண்டே போகலாம். என்னனமோ சொல்றீங்க ஒன்னும் புரியவில்லை என்று சொல்லாதீர்கள். நாம் தெரிந்து வைத்து இருப்பதைவிட நமக்கு தெரியாதது நிறையா இருக்கு. இதை புல்லறிவாண்மை என்ற அதிகாரத்தில் திருக்குறள் விளக்கமாகவே சொல்லும்.

நோய்க்கான காரணத்தையும், அதற்கான மருந்துகளையும் தெரிந்து இருக்கும் ஒரு மருத்துவருக்கு அடிப்படையில் சோதிடம் தெரிந்து இருக்க வேண்டும் என்பது தான் நமது குறிப்பும் எண்ணமும். இது இன்றைய சூழலில் சாத்தியமில்லை என்றாலும் சோதிடம் தெரிந்த மருத்துவர்களும் இருக்க தான் செய்கிறார்கள். ஆனால் அவர்கள் மருத்துவத்தில் சோதிடத்தை பொருத்தி பார்க்கிறார்களா என்பது கேள்விக்குரியது தான்.

இன்றைய நாளில் மருத்துவ சோதிட குறிப்புகளை சொல்பவர்கள் நோய் உள்ள இடத்தை சுட்டி காட்டுவார்கள். அவ்வளவு தான். உதாரணமாக, கண் நோய் என்று சொல்லி விடுவார்கள், glucoma , squint, rettina, myopia, colour blindness, என கண் மருத்துவத்திலே பல நோய்கள் இருக்கின்றன.

நம்முடைய மக்களுக்கு பல நோய்கள் இருப்பதே தெரிவதில்லை. அப்புறம் எப்படி அதன் பெயர் தெரியும் என்றால்

போல என்னவோ சொல்றீங்களே என்று கேட்காதீர்கள் கொரானா என்பது, புயலுக்குக் பேர் வைப்பது போல வைரஸ் கிருமிகளுக்கு வைக்கப்பட்ட பெயர். அது நோய் அல்ல. பர்கின்சன் எனபது நோயின் பெயர். இது வயதானவர்களுக்கு வரும் நடுக்கம் தான்.

இப்படி சொல்லிக் கொண்டே போனால் ஒருவாரம் இரண்டு பக்கம் போதாது.. எனினும் சில அடிப்படை சோதிட குறிப்புகளை சொல்கிறேன் சரியாக உள்ளதா சொல்லுங்கள்..

“**நோய் நாடி நோய் முதல் நாடி அது தணிக்கும் வாய் நாடி வாய்ப்ப செயல்**” என வள்ளுவம் சொல்வதை அப்படியே சோதிடத்தில் பொருத்தி பார்த்தால் நமக்கு சுலபமாக விளங்கும்.

நோய்க்கு பார்க்க வேண்டிய கிரகம் எது தெரியுமோ? சனி தான். நோயற்ற வாழ்வு வேண்டுமே என்று தான் சனியை பார்த்து பயப்படுகிறார்களா என்று கேட்காதீர்கள் அதற்கு வேறு காரணம் உள்ளது அதை வாய்ப்பு கிடைக்கும் போது, இன்னொரு சந்தர்ப்பத்தில் சிந்திக்கலாம்.

நோயின் தன்மையினை அறிவதற்கு நரம்புக்கு காரகம் வகிக்கும் கேது. நரம்புகள் தான் மற்ற உறுப்புகளுக்கு இரத்தத்தை கொண்டு செல்கிறது என்பது உங்களுக்கு தெரிந்து இருக்கும். நோய்க்கான காரணத்தை சொல்ல செவ்வாய், உணவு தான் நோய்க்கான காரணத்தில் முக்கிய பங்கு வகிக்கிறது. அதனால் தான் உணவை அரைத்து தரும் பல் கூட செவ்வாய்.

நோய் குணமாகும் நிலையை அறிய குரு-சுக்கிரன் மற்றும் புதன் இருக்கும் அமைப்புகள். நோய் அதிகரிக்குமா? அல்லது குறையுமா? என்று பார்க்க ஒளிக்கிரகமான சூரியன்-சந்திரன் என ஒரு சுற்று வலம் வந்தால் தான் மருத்துவ சோதிடத்தை தொட்டு பார்க்க

முடியும். திருக்குறள் சொல்வதை அப்படியே ஒப்பிட்டு நோக்கினால் மருத்துவ சோதிடம் சுலபமாக விளங்கும்.

ஒரு நோய்க்கு ஒரு மருந்து என ஆங்கில மருத்துவத்தில் இருக்கும். ஆனால் தமிழ் மருத்துவத்தில் ஒரு நோயாளிக்கு ஒரு மருந்து என இருக்கும். பாருங்களேன் கண் எல்லோருக்கும் இருக்கு ஆனால் அதன் அமைப்பு ஒரே மாதிரியாகவா இருக்கிறது. கண் மட்டுமல்ல, காது மூக்கு என நிறைய சொல்லலாம். இதை விளக்கி சொல்ல "அங்க வித்யா" எனும் சாஸ்திரத்திற்கு போக வேண்டும் இல்லையா? என்பதை புரிந்து கொண்டால் சொல்ல வரும் விஷயம் தெளிவாக விளங்கும்.

அப்பாடி.. இதிலே இவ்வளவு விஷயம் இருக்குதான்னு யோசிக்காதீங்க.. அதனால் தான் உடல் நோய்க்கு மருந்து தரும் மருத்துவரை போல, உடலுக்கும் (பரிகாரமும்), உள்ளத்திற்கும் (இதமான ஆலோசனையும்) சேர்த்து ஆற்றுப் படுத்தும் சோதிடரும் மதிக்க தக்கவர். அவருக்கு புஷ்டியாக தட்சணை கொடுத்து கௌரவிக்க வேண்டும் என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

குண ரோக சத்ரு ஸ்தானம் என்று சோதிடத்தில் 6 ம் இடத்தை வைத்து கடன், நோய், எதிரி என்று பொதுப்படையாக சொல்லுவது வழக்கம். ஆனால் இந்த 6 ம் பாவகத்தின் அடிப்படை தன்மையை ஆய்ந்து சொல்கிற போதே ஜோதிடரின் ஞானத்தின் தெளிவு வெளிப்படும். கேட்பவருக்கும் நம்பிக்கை ஏற்படும்.

அதனால் தான் 6ம் பாவகத்தை பற்றி முழுமையாக தெரிந்து கொள்வது சிரமம் என்று சொல்லுவார்கள், சோதிட வகுப்பில் கூட இதை மேலோட்டமாக சொல்லி விட்டு, skip செய்து விடுவார்கள். 6ம் பாவகம் என்பது லக்கினத்தில் இருந்து வல சுற்றாக எண்ணி வரும்

ஆறாவது கட்டம் என்பது சொல்லாமலே பலருக்கு தெரிந்து இருக்கும்.

6ம் பாவகம், அந்த பாவகாதிபதி, அவர் அமர்ந்த வீடு, பாவகத்தில் அமர்ந்த கிரகம் அவருடன் பாவகாதிபதிக்கு உள்ள நட்பு, இந்த பாவகத்தை பார்க்கும் கிரகம் என்று ஒரு குட்டி பட்டியலை மனதில் ஒரு பக்கம் வைத்துக் கொண்டு, நோய் தரும் கிரக நிலை, அவை இருக்கும் இடம், அதற்கான காரணம், அது தீரும் நிலை, நடைபெறும் தசா புத்தி என இன்னொரு பட்டியலை மறுபக்கம் வைத்துக்கொண்டு இரண்டையும் இணைத்து பார்த்து பலன் சொல்ல பழக வேண்டும்.

அப்போ 6ம் பாவகம் மட்டும் பார்த்தால் போதுமா என்று கேட்காதீர்கள் இத்துடன் 2,4,8,11,12 ஆகிய இடங்களையும் பார்க்க வேண்டும். அதற்க்கான காரணத்தை இன்னொரு வாய்ப்பில் சிந்திப்போம்.

இவை எல்லாம் சோதிட அடிப்படையில் சொல்லப்பட்ட மருத்துவ சிந்தனைகள் தான் அதனால் அய்யர் சொல்லி விட்டார், இனி மருத்துவம் வேண்டாம் சோதிடம் போதும் என்று நினைத்து விடாதீர்கள். உங்கள் ஆரோக்கியம் மற்றும் நலத்தின் மீது எங்களுக்கும் அக்கறை உண்டு. “நலம் வாழ எந்நாளும் வாழ்த்துக்கள்”.

நல்லதே நினைப்போம் நல்லதே நடக்கும்.

-

-

-

-

# -49-

“ஹாப்பி பொங்கல்..!!” என்று தொலைபேசியில் சொல்லிக்கிட்டு ஒருவர் பேச தொடங்கினார்.

“பொங்கல்” என்றாலே ஹாப்பி தானே..!!என்றபடியே அவரிடம் பேசிக் கொண்டு இருந்த போது, ஐயா, எனக்கு ஒரு சந்தேகம் என்று ஆரம்பித்தார்.

பொங்கல் என்பது அரிசியையும் வெல்லத்தையும் சேர்த்து போட்டு நெய் விட்டு இறக்கி வைத்தால் பொங்கல், சுவைக்காக, கொஞ்சம் ஏலக்காய், பச்சை கற்பூரம், முந்திரி, பாதம் என தட்டி போடுவாங்க அவ்வளவு தானே..

எப்போ வைத்தாலும் பொங்கல் இவ்வளவு தானே! இதற்கு ஏன் இவ்வளவு கொண்டாட்டம்?. சமைப்பதற்கும் சாப்பிடுவத்தற்கும் இதுக்கெல்லாம் ஒரு பண்டிகையா என்று யாரவாது கேட்டால் அவர்களுக்கு பதில் சொல்ல தெரிய வேண்டாமா? இதற்கும் சோதிடத்திற்கும் தொடர்பு உண்டா? சோதிட ரீதியாக விளக்கம் தர முடியுமா? என கேட்டார்.

இந்த பண்டிகைக்கு தமிழகத்தில் அழைக்கும் பெயர் “பொங்கல்” தான், பிற மாநிலத்தில் “மகர சங்கராந்தி”, என்றும் “உத்தராயணம்” என்றும், பிகு என்று , “லோஹரி” என்றும் “சட்” என்றும் அவரவர்கள் வழக்கப்படி அழைத்து கொண்டாடுவார்கள்.

இயற்க்கைக்கு நன்றி சொல்லும் பண்டிகை என்று கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள் சொல்லுவார்கள். என்னமோ தட்டிலே பொங்கல் என ஒரு இனிப்பை வைத்து தருகிறீர்களா சரி சாப்பிட் விட்டு போங்க சார் இதுக்கு போய் இம்புட்டா. என்று கிண்டல் செய்தபடி சொல்பவர்களும் (கருப்பு சட்டைகளும்) இருக்க தான் செய்கிறார்கள்

இவர்கள் சொல்வது போல இயற்கைக்கு நன்றி சொல்வது என்றால் ஏன் தை மாதம் சொல்ல வேண்டும் என்று கேட்டால் பகுத்தறிவாதிகளிடம் பதில் இருக்காது.

என்னிக்கு குக்கரில் வைத்தாலும் அரை மணி நேரத்தில் பொங்கல் ரெடி, இதுக்கு ஏன் இப்படி ஒரு கொண்டாட்டம் என வாழ்க்கையின் விரக்தியில் இருப்பவர்களும் சொல்ல தான் செய்வார்கள்.

சரி பொங்கல் திருவிழாவை நாம மட்டும் கொண்டாடாமல், போகியில் தொடங்கி, மாட்டுப் பொங்கல், காணும் பொங்கல் என நான்கு நாட்கள் லீவு விட்டால் நம்ம கிட்ட வேலை செய்கிறவர்கள் ஊருக்கு போனவர்கள் இன்னும் மூன்று நாட்கள் சேர்த்து லீவு எடுத்துக்கிட்டு ஒரு வாரம் மட்டும் போட்டு விடுவார்கள் என்று மாற்று மதத்தை சேர்ந்த முதலாளிகள் புலம்புவதையும் பார்த்துக் கொண்டு தான் இருக்கிறோம்.

இந்த பொங்கல் திருநாளை சோதிட பார்வையில் கொஞ்சம் சிந்தித்து பார்க்கலாமா?

எல்லா கிரங்களுமே குறிப்பிட்ட நாட்களில் பெயர்ச்சி அடையும் என்பது சோதிட ஆர்வலர்களுக்கு தெரிந்து இருக்கும். இதில் பலருக்கும் தெரிந்தது குரு பெயர்ச்சியும், சனி பெயர்ச்சியும், அன்மை காலமாக சர்ப்ப கிரக பெயர்ச்சியும் மக்கள் மத்தியில் பிரபலமாகி உள்ளது.

இதில் குரு ஆண்டுக்கு ஒரு முறையும், சனி இரண்டரை ஆண்டுக்கு ஒரு முறையும், ராகு கேது பெயர்ச்சி ஒன்றரை வருடத்திற்கு ஒரு முறையும் ஒரு ராசியில் இருந்து இன்னொரு ராசிக்கு வல சுற்றாக (clock wise) இடம் பெயர்வதை தான் கிரக பெயர்ச்சி என்று சொல்லுவார்கள். இதில் ராகு கேது பெயர்ச்சி மட்டும் இடமாக (anticlock wise) பெயர்ச்சி அடையும் என்ற கால அளவினை சோதிட சாத்திரம் சொல்கிறது.

இதே போல நவக்கிரங்களின் தலைமை கிரகமான சூரியன் ஒரு ராசியில் இருந்து இன்னொரு ராசிக்கு பெயர்ச்சியாகும் கால அளவு ஒரு மாதம். மேஷத்தில் (சித்திரையில்) தொடங்கி, ஒவ்வொரு ராசியாக பெயர்ச்சி ஆவதை ஒவ்வொரு மாதமாக வைத்து சொல்வது உண்டு.

அதில் சூரியன் தனுசு ராசியில் இருந்து மகர ராசிக்கு பெயர்ச்சியாகும் காலம் தை மாதம் ஆகும். அதனால் தான் மகர சங்கராந்தி என்று தை மாதத்தில் இந்த பொங்கல் திருவிழா. அதுக்கு பொங்கல் வேற வைக்க வேண்டுமா என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது.

இன்றைய கால இளைய தலைமுறையை சேர்ந்த குடும்ப தலைவிகள், மேலை நாட்டு நாகரீகத்தில், விரித்த கூந்தலும் ஜீன்ஸ் பேன்ட் என்றும் தன்னை வேறு விதமாக அடையாளம் காட்டுபவர்கள் பொங்கல் கூட செய்ய தெரியாமல், கடையில் வாங்கி கொண்டாடும் இன்றைய சூழலையும் நாம் பார்த்துக் கொண்டு தான் இருக்கிறோம்.

நமது வாழ்க்கை முறைப்படி, ஒவ்வொரு மாதப்பிறப்பின் போதும், பொங்கல், பாயசம் இப்படி வைப்பது தான் பழக்கம். அவுங்க அவுங்களுக்கு சர்க்கரை என்பதால், காபியில் கூட ஒரு கல்லு கட்டியை அதாங்க sweetner போட்டு குடிக்கும் இன்றைய நாளில் மாதம் ஒரு ஸ்வீட் என்றால் அவ்வளவு தான்.

செய்வது யார்? சாப்பிடுவது யார்? அப்புறம் டாக்டரிடம் ஓடுவது யாரு? என்று அந்த பழக்கத்தை மறந்தே விட்டார்கள். பொங்கலை மட்டுமாவது செய்து சாப்பிடுகிறார்களே என்று சந்தோஷ படுங்கள். அவ்வளவு தான்.

சரி ஒவ்வொரு மாத பிறப்புக்கும் எதற்கு பொங்கல்/பாயசம் என இனிப்பு செய்ய வேண்டும் என்று உங்களுக்கு கேட்க தோன்றும். உண்மை தான்.

பிறந்த நாள் என்றால் ஒரு டப்பாவில் சாக்லேட் போட்டு குழந்தைகளை எல்லோருக்கும் கொடுக்க சொல்கிறோமே... ஏன்? என்று எப்போதாவது யோசித்து பார்த்தது உண்டா? இனிப்பை கொடுத்து வரவேற்பது என்ற மரபு தொன்று தொட்டு இருந்து வரும் பழக்கம்.

உளவியல் ரீதியாக சொல்ல வேண்டும் என்றால், இனிப்பு மன நிலையை மாற்றி அமைக்கும் தன்மையது. இதில் சோகத்தில் இருந்து சுகத்து அழைத்து செல்லும் ஒரு மனவியல் ரீதியான உத்தி அவ்வளவு தான்.

ஒரு ராசிக்கு சூரியன் வரும் போது, கிரங்களின் தலைமை கிரகமான சூரியனுக்கு இனிப்பை தந்து வரவேற்பது நம்முடைய கலாச்சார மரபாக இருந்து வந்தது.. வந்து கொண்டு இருக்கிறது இன்னமும் வரும்.

அதற்கு பொங்கலை தான் செய்ய வேண்டுமா? வேறு சில இனிப்புகளை செய்ய கூடாதா என்று உங்களுக்கு கேட்க தோன்றும். சரி தான்.

மற்ற இடங்களில் உள்ள கோவில்களில் உள்ள நவகிரங்கள் ஆளுக்கு ஒரு திசையில் இருக்கும். ஆனால், ஆலயங்களின் அணி வகுப்பாக திகழும் திருச்சி மாவட்டத்தில் உள்ள வயலூர் முருகன் கோவிலில் நவக்கிரங்கள் அனைத்தும் சூரியனை பார்த்தபடி இருக்கும்.

திருச்சி மாவட்டத்தின் ஒரு பகுதியான உறையூர் பற்றிய குறிப்புகள் குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு போன்ற சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றது.

முருகப்பெருமானின் பெருமை சொல்லும் ஆலயமாக இது இருந்தாலும், தொடக்க நாளில், இது சிவாலயமாகவே இருந்தது. என்கிறது தலவரலாறு.

காலமறியா காலத்தில் காட்டு விலங்குகளை வேட்டையாடச்

வாளால் வெட்டினான். அப்போது ஒடிந்த கரும்பிலிருந்து ரத்தம் வடிந்தது. இதனால் பதறிய சோழன் வயலைத் தோண்டிப் பார்க்கையில், அங்கே ஈசன் லிங்கமேனியாக காட்சி அளித்தான். அங்கேயே அவருக்கு ஓர் ஆலயம் எழுப்பி, ஆதிநாதர் என்ற திருநாமம் இட்டு வணங்கினான் என்று சொல்லப்படுகிறது.

இங்குள்ள ஆதிநாதர் தம்மை நாடிவரும் பக்தர்கள் கேட்பதை மறக்காமல் கொடுப்பதால் மறப்பிலி நாதர் என்ற திருநாமமும் உண்டு. இங்கு அம்பிகையின் திருநாமம் ஆதிநாயகி.

*ராஜ கெம்பிர நாடாளு நாயக வயலூரா*

என்ற அருணகிரிநாதர் திருப்புகழ் இத்தலத்தின் சிறப்பை பறைசாற்றும்

நவகிரங்களில், தலைமை கிரகமான சூரியனை எல்லா கிரகங்களும் வழிபடும் இது போன்ற அமைப்புள்ள திருத்தலங்கள் திருச்சி மாவட்டத்திலேயே வேறு சில இடங்களிலும் இருக்கிறது என்றாலும், இந்த தலத்தை உங்களுக்கு சொல்வதற்காக தான் இத்தனையும் சொல்லும்படியானது.

இந்த பொங்கலில், அரிசி, வெல்லம், குரு-சந்திர யோகத்தை பெறுவதற்காக. இந்த யோகம் அமைந்தால் செல்வம், செல்வாக்கு, புகழ் தேடி வரும் என்பதை சோதிட ஆரவலர்கள் அறிவார்கள். கஜகேசரி, சகட யோகம் எல்லாம் சோதிட அன்பர்களுக்கு சொல்லாமலே விளங்கும்.

ஏலக்காய், கிராம்பு நெய் போன்ற வாசனை திரவியங்கள்,

சுக்கிர அம்சம் கொண்டது. இது சேரும் போது, பொங்கல் சுவையாக இருப்பது போல,வாழ்க்கை சுவையாக அமைந்து விடும் அமைந்து விட வேண்டும் என்ற நம்பிக்கை.

அதனால் தான் ஒவ்வொரு சங்கராந்தியின் போதும், பொங்கல் வைத்து கொண்டாடுகிறோம் என்பதை புரிந்து கொள்ளுங்கள். ஒவ்வொரு வழிபாட்டு முறையிலும் இந்து வாழ்க்கை முறையிலும்

ஒரு சோதிட குறிப்பு உள்ளது என்பதை புரிந்து கொண்டால் வாழ்க்கையில் உள்ள சுமை குறைந்து சுவை கூடும்.

நல்லதே நினைப்போம் நல்லதே நடக்கும்.

# -50-

எப்படியோ ஒரு வழியா சனியார் பெயர்ச்சி வந்தே விட்டது. ஆனாலும் பாருங்க... எந்த சானலை திருப்பினாலும் சனிப்பெயர்ச்சி பலன்கள்,என்று சொல்லாமல் விடுவதில்லை. அதிலும் இந்த ராசிக்கு நல்லது என்று ஒருவர் சொன்னால், இன்னொரு கண்ணோட்டத்தில் இப்படி இருக்க வேண்டிய அவசியம் இல்லை என்று இன்னொரு சானலில் சொல்றாங்க..

இன்னும் சிலர் இந்த ராசிபலன் ஒரு குறிப்பிட்ட அளவில் தான் மற்றபடி உங்கள் பிறப்பு ஜாதகத்தை வைத்து தான் பலன் சொல்ல வேண்டும் என்று சொல்றாங்க..

ஒவ்வொருவரும், ஒரு கண்ணோட்டத்தில் சொன்னாலும், அவரவர்கள் சொல்வதை கேட்கும் போது, அது சரி தான் என்று சொல்வது போல தோன்றுகிறது. ஆனாலும் நமக்குன்னு ஒரு கஷ்டம் வந்து விட்டால், அந்த வருத்தமும் சோகமும் பொறுத்துக் கொள்ள முடிவதில்லை.

என்ன தான் ஆறுதல் சொன்னாலும், எவ்வளவு தான் சமாதானம் சொன்னாலும், நமக்குன்னு என்ன இருக்குதோ அது நடந்தே தீரும் என்பதை பட்டு உணர்ந்த பிறகு சுமைகளை சுமந்து பிறகு தான் தெரிந்து கொள்ள முடிகிறது.

முட்கிரீடம் சுமந்து சிலுவையில் மறித்த ஏசு நாதரானாலும் சரி, ஈரேழு ஆண்டுகள் வனவாசம் சென்ற இராமனானாலும் சரி என்று நிறைய கதைகள் சொல்லலாம். “நடப்பதுதானே நடக்கும்” என்பதை கொஞ்சம் இடைவெளி விட்டு சொல்லி பாருங்கள். “நடப்பது, தானே நடக்கும்” மற்றது உங்களுக்கே புரியும்.

இந்த சனியார் பெயர்ச்சியும் மற்ற கிரக பெயர்ச்சிகளும் இந்துக்களுக்கு மட்டும் தானா...? மற்ற மதத்தினார்களுக்கு இல்லையா? என்ற சந்தேகமும், இந்து மதத்தில் மட்டும் தான் அது

போல எதுவுமே இல்லையா..? இந்த கிரகங்கள் எல்லாம் இந்துக்களை மட்டும் தான் பாதிக்குமா என்று சிலருக்கு சந்தேகம் வரலாம். அவர்களுக்கு பதில் சொல்லும் விதமாக தான் இந்த வார பதிவு.

காலையில் உதிக்கும் சூரியன் மாலையில் மறைவது என்பது எல்லா மதத்தினருக்கும் ஒன்று தான் அவரவர்கள் இருப்பிடத்தை ஒட்டி உதிக்கின்ற அல்லது மறைகின்ற நேரம் மாறலாமே தவிர உதிப்பதும் பின் மறைவதும் இயல்பானதே அதில் மாற்றம் இல்லை. மத வேறுபாடும் இல்லை.

எந்த மதத்தினராக இருந்தாலும் அன்பு ஒன்று தான் பிரதானம் என்ற அடிப்படையை புரிந்து கொள்ளுங்கள். அன்பு வேண்டாம் என்று சொல்லக் கூடிய மதம் ஒன்றை சொல்லுங்கள் என்று கேட்டு பாருங்கள் ஒருவரும் பதில் சொல்ல முன்வர மாட்டார்கள்.

அந்த நிலையில் அல்லது செயல் முறையில் தான் மாற்றம் வருமே தவிர அன்பு ஒன்றே பிரதானம் என்பதை விலங்குகளிடமிருந்து கூட கற்றுக் கொள்ள முடியும்.

அது போல தான் கிரகங்களும் அவரவர்களுக்கு இட்ட வேலைகளை அவர்கள் சரியாக செய்வார்கள். மாற்று மதத்தினர் சோதிடம் பார்க்க வரும்ம் போது, அவர்கள் மனதை புன்படுத்தாத வகையில், அவர்கள் சமய வழிபாட்டு முறைகளை சொல்லி நல்வழிப்படுத்த வேண்டும் என்பது தான் சோதிடர்களின் அடிப்படை கடமை என்பதை புரிந்து கொண்டால் சொல்ல வரும் விஷயத்தை புரிந்து கொள்ள முடியும்.

சனியார் பெயர்ச்சி பற்றிய சிந்தனைக்கு வரலாம். சனியார் பெயர்ச்சியினுடைய தாக்கமும் பாதிப்பும் எல்லா மதத்தினருக்கு மட்டுமல்ல இது பற்றிய நம்பிக்கை இல்லாதவர்களுக்கும் உண்டு. இதில் துளியும் மாற்றுக் கருத்து இல்லை. அவர்கள் பிரச்சனை வரக் கூடிய சூழலாக இருந்தால் அதை சந்திக்க தயாராக இருப்பார்கள்,

அல்லது ஏற்றுக் கொள்ள தயாராக இருப்பார்கள் என்று தான் சொல்ல வேண்டும்.

அப்படி என்றால் பரிகாரங்கள் செய்வதால் இந்த தாக்கம் குறையுமா என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது. பரிகாரங்கள் செய்வதும் செய்யமாட்டார்கள் என்று சொல்வதும் ஜாதகத்தில் சொல்லிட முடியும் என்றால் இந்த கேள்விக்கான பதில் உங்களுக்கே கிடைத்து இருக்கும்.

லாப சனி, கர்ம சனி, அஷ்டம சனி, கண்டக சனி, ரோக சனி, அர்த்தாஷ்டம சனி, ஜென்ம சனி, விரய சனி என்று எந்த நிலையில் இருந்தாலும், உரியவர்களுக்குரிய அந்த பலன்கள் கிடைத்தே தீரும்.

இந்துக்கள் மட்டுமல்ல மற்ற மாற்று மதத்தினரவர்களுக்கும் சொல்லக் கூடிய எளியமையான பரிகாரங்களை, பல முறை சொல்லி இருக்கிறோம்.

சரி, எல்லோரும் பயன்படுத்தி சனியார் பெயர்ச்சி தாக்கத்தில் இருந்து சிரமங்களை எதிர் கொண்டு வெற்றி பெற கூடிய எளிய பரிகாரம் ஒன்று சொல்லவா..? இதை எந்த மதத்தினரும் செய்யலாம், மதம் கடவுள், சோதிடம் என நம்பிக்கை இல்லாதவர்களும் செய்யலாம். இது சுலபமானது தான்.

உங்களுக்கு வசதியான ஒரு சனிக்கிழமையில், சனி ஓரையில், முள் செடி ஒன்றை நட்டு விடுங்கள். சில ஆண்டுகள் கழித்து அடுத்த சனியார் பெயர்ச்சியில் வெட்டி விடலாம். தவறில்லை.

நகரத்தில் வாழ்பவர்கள் அடுக்கு மாடி கட்டிடத்தில் வசிப்பவர்கள் இது போல செய்ய முடியாது என்று வருத்தப்பட தேவையில்லை. இவர்கள் cactus என்று சொல்ல கூடிய ஒரு வகை கள்ளி செடியை வீட்டில் ஒரு ஓரத்தில் வைத்து வளர்த்தால் போதும்.

முன்னூறு விதமான கள்ளிச்செடிகள் இருக்கிறது. உங்கள் ஜாதகத்தில் சனியார் அமைந்து இருக்கும் இடத்தை பொறுத்து, எந்த

உங்களுக்கு நம்பிக்கைக்குரிய ஜோதிடரிடம் கேட்டு தெரிந்து கொள்ளுங்கள்.

எங்கள் வீட்டில் ஏற்கனவே அழகுக்காக இது போன்ற cactus வளர்க்கிறோமே என்று சொல்பவர்கள் இன்னொன்றை தனியாக வைத்து வளர்க்கலாம். தவறில்லை. ஒவ்வொருவருக்கும் கிரக பாதிப்பு இல்லாமல் இருக்க ஒவ்வொருவரும் தனித்தனியாக எங்கே வேண்டுமானாலும் வைத்து வளர்க்கலாம். படுக்கையறையில் மட்டும் வைத்து கொள்ளாதீர்கள்.

இந்த cactus வகைகள் பராமரிக்க தேவையில்லை. தானே வளரும். தண்ணீர் கூட தினமும் தர தேவையில்லை. நவ கிரகங்களிலேயே ஒரு ராசியில் இருந்து இன்னொரு ராசிக்கு பெயர்ச்சியாக அதிக நாட்கள் எடுத்துக் கொள்ளும் கிரகம் சனியார் தான் என்பது சோதிட அன்பர்களுக்கு தெரியும்.



**pencil cactus**

அது போல சுமார் ஒரு இன்ச் வளருவதற்கு இந்த cactus க்கு சுமார் ஒன்றரை வருடங்கள் ஆகும் என்றால் இதை ஏன் சனிப்பெயர்ச்சிக்கு பரிகாரகமாக சொல்லப்பட்டது என்று உங்களுக்கு தெரிந்து இருக்கும்.

இந்த முள்ளிச் செடிக்கு முத்தி கொடுத்த வரலாறு சைவ அன்பர்களுக்கு தெரிந்து இருக்கும் என்பதால் அதை விளக்கி சொல்லவில்லை.

உங்கள் ஜாதகத்தில் சனியார் இருக்கும் நிலை, இந்த சனிப்பெயர்ச்சியில் உங்களுக்கு கிடைக்க கூடிய பலன் இவைகளை வைத்து cactus வகைகளை திறமையும் அனுபவமும் உள்ள சோதிடர்கள் உங்களுக்கு தேர்வு செய்து தருவார்கள்.

நல்ல பலன் கிடைத்தாலும் கெடுபலன் அமையும் சூழல் இருந்தாலும் எல்லோருமே வாங்கி வைக்க கூடியது **பென்சில்**

காய்க்காது, இலை கூட கொடுக்காது என்பதை புரிந்து கொண்டு, விமான பயணத்தில் turbulance என சொல்லும் போது, பெல்ட் மாட்டிக் கொள்வது போல இந்த சனிப்பெயர்ச்சியை வெற்றி கொள்ளுங்கள்.

நல்லதே நினைப்போம் நல்லதே நடக்கும்.

# -51-

பங்கு சந்தை பற்றிய பலன்கள் கடந்த இதழில் தந்து இருந்தீர்கள். அது அப்படியே இருக்கிறதே எப்படி ஐயா என்று ஆர்வமுடன் பேசிய குறுஞ்செய்தி அனுப்பிய வாசகர்களுக்கு நன்றியை பதிவு செய்து, தொடர்ந்து தரமான, மக்களுக்கு பயன் தரும் செய்திகளை, தரும் பால சோதிடம் படியுங்கள் பொக்கிஷங்களை சேகரித்து வையுங்கள் என்ற ஆலோசனையை தருகிறோம்

இப்போ பாருங்கள், இறை நம்பிக்கை உள்ளவர்களுக்கு தெரியும். அதிசயமான அல்லது வித்தியாசமான திருக்கோயில்கள் அல்லது தெய்வங்கள் என தமிழகத்தில் பல இடங்களில் பார்த்து இருப்போம் அல்லது படித்து கேள்வி பட்டு இருப்போம்.

உதாரணமாக சொல்வதென்றால், “திருவலஞ்சுழி” என்ற தலத்தில், விநாயகர் துதிக்கை வலமாக சுழித்து இருக்கும். ஓர் ஆறுமுகமும், ஈராறு கரமும் கொண்ட சுப்பிரமணிய சுவாமிக்கு, “ஓதிமலை” என்ற திருத்தலத்தில் ஐந்து முகமும், எட்டு கரமும் தான் இருக்கும். “எண்கண்” என்ற திருத்தலத்தில் ஒரே கல்லில் வடித்த முருகன் மயில் மீது இருப்பது போல அமைந்து இருக்கும். இதே போல வேடனாக, நாக சுப்பிரமணியனாக, முருகன் கையில் ஜப மாலையுடன் என நிறைய சொல்லிக்கிட்டே போகலாம்.

இவை ஒவ்வொன்றுக்கும் ஒரு பொருள் ஒரு சோதிட குறிப்பு, பரிகார பலன்கள் என சொல்ல நிறைய இருந்தாலும், இவைகளை ஒவ்வொன்றாக தனியாக இன்னொரு வாய்ப்பில் சிந்திப்போம்.

இது போல நவக்கிரகங்கள் வழிபாட்டில் இப்படி ஏதாவது இருக்குதா என்ற எண்ணமும் சிந்தனையும் உங்களுக்கு வரலாம் அதை சொல்வது தான் இந்த வார சிந்தனையின் நோக்கம்

நவக்கிரக சன்னதிகள் எப்போதுமே கோவிலுக்கு வெளியில்

உங்களுக்கு தெரிந்து இருக்கும். அதுவும் முக்கியமாக சைவ கோவில்களில் மட்டும் தான் நவக்கிரங்கள் இருக்கும். வைணவ கோவில்களில் இருக்காது. அது ஏன் என்பது பற்றி இன்னொரு வாய்ப்பில் சிந்திக்க வைத்துக் கொள்வோம்.

இந்த நவக்கிரகங்கள் இறைவனின் ஏவலர்கள் (executing officers) அதனால் இவர்களுக்கு வழிபாடு செய்வது எள்ளு பொட்டலாம் போடுவது எல்லாம் கையூட்டு (லஞ்சம் அல்லது மாமூல்) தருவது போல, அதனால் பிரச்சனைகள் தீர்வதற்கு பதிலாக பாவமும் பழியும் தான் வரும் என்று உண்மையை சொன்னால் நம்மை வேறு விதமாக தான் பார்ப்பார்கள்.

ஆண்டவன் இட்ட கட்டளைகளை மட்டும் தான் இந்த நவக்கிரகங்கள் நிறைவேற்றுவார்கள். அதனால் அவர்களுக்கு கோவிலுக்கு உள்ளே மண்டபத்தில் இடமில்லை என்பதை மனதில் பதிய வைத்துக் கொள்ளுங்கள். இந்த நவக்கிரங்கள் பொதுவாக, ஐந்து வித நிலையில் இருக்கும். அவையாவன

1. நவக்கிரங்கள் ஆளுக்கு ஒரு திசையில் இருப்பார்கள். இது பொதுவாக எல்லா கோவில்களிலும் இருக்கும். இந்த அமைப்பை நாம் பார்த்து இருப்போம்.

2. நவக்கிரங்கள் தம்பதி சமேதராக இருப்பார்கள். உதாரணம் ஆதிநாதர் திருக்கோவில்

3. எல்லா நவக்கிரங்களும் தலைமை கிரகமான சூரியனை பார்த்தபடி இருக்கும். (திருப்பைஞ்ஞிலி திருக்கோயில்), இதிலும் சூரியன் கிழக்கு பார்த்து அல்லது மேற்கு பார்த்து என வேறு இருக்கும். இன்னும் சில கோவில்களில் சனி தேவருக்கு தனி சன்னதியே இருக்கும்.

4. நவக்கிரங்கள் வரிசையாக அணி வகுத்து இருக்கும். (திருக்குவளை திருக்கோயில்)

5. நவக்கிரங்களில் ஒரு கிரகம் இல்லாத நிலையில்

“ஆஹா இது என்ன அதிசயம். இப்படி கூட இருக்கிறதா?” என்று சிந்திக்காதீர்கள்.. இவை ஒவ்வொன்றுக்கும் ஒரு வித பலன் உண்டு. பரிகார விளக்கம் உண்டு. அதை வைத்து தான் பிரச்சனைகளை ஜாதக ரீதியாக ஆய்வு செய்து, அதற்குரிய பரிகாரங்கள் என அனுபவமிக்க சோதிடர்களால் சொல்லப்படுகிறது.

இல்லை என்றால் எல்லா இடத்திலும் தானே சுவாமி இருக்கிறது. எல்லா இடத்திலும் தானே நவக்கிரங்கள் இருக்கிறது. ஏன் அந்த கோவிலுக்கு போய் பரிகாரம் செய்ய சொல்றாங்க என்று கேட்க தோன்றும் இல்லையா.

சரி. கொஞ்சம் கவனியுங்கள், சோதிடத்தில், நவக்க்கிரகங்களை சுபர் அசுபர் என பிரித்து வைத்து இருப்பார்கள். பொதுவாக, சுபர்கள் சுப பலன்களை கூடுதலாகவும், அசுபர்கள் சுப பலன்களை விட அசுப பலன்களை கூடுதலாகவும் செய்வார்கள் என்பது பொதுவாக நமக்கு தெரிந்து இருக்கும். ஆனாலும் வலுபெற்ற கிரகங்கள் அவர் தம் பலன்களை தாம் இருக்கும் இடத்திற்கு ஏற்ப தருவார்கள் என்பது நம்மில் பலருக்கும் தெரிந்து இருக்கும்.

இதில் சொந்த வீடுகள் இல்லாத சர்ப்ப கிரகங்கள் நீங்கலாக, அசுபர்கள் என சொல்லும் கிரகம் சனியும் செவ்வாயும் தான் இந்த கிரகங்கள் சாதகமற்ற சூழலில் அமைந்து விட்டாலோ, அல்லது அந்த திசைகள் வந்து விட்டாலோ, அல்லல் படாதவர்கள் இருக்க முடியுமா என்ன என்று உங்கள் அனுபவத்தில் இருந்தே நீங்கள் தெரிந்து கொள்ளலாம்.

சரி அதுக்கு என்ன செய்யலாம் என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது. இவர்களுக்கு குறிப்பு சொல்ல தான் இந்த தகவல். இது போன்ற சனிக்கிரக பாதிப்பு உள்ளவர்கள் சனி திசை நடப்பில் உள்ளவர்கள், அதே போல செவ்வாய் திசை பாதிப்பு

கந்தர் சஷ்டி கவசம் பாடப் பெற்ற சென்னிமலை முருகன் கோவிலுக்கு சென்று வருவது அவசியம்.

சென்னிமலை முருகன் கோவிலில், நவக்கிரங்களில் செவ்வாய் கிரகம் இருக்காது அதற்கு பதில் முருகனே அந்த பொறுப்பை கூடுதல் பொறுப்பாக எடுத்துக் கொள்வார். தன்னை தானே பூஜித்த அதி அற்புத திருத்தலம் சென்னிமலை முருகன் திருத்தலம் தான். முருக பக்தராக அல்லாதவராக இருந்தாலும் சரி, மாற்று மதத்தினராக இருந்தாலும் சரி, கடவுள் நம்பிக்கை இல்லாதவராக இருந்தாலும் சரி. ஒரு முறை இந்த திருத்தல படி ஏறி சென்று வாருங்கள். உங்கள் எண்ணத்திலும் செயலிலும் மாற்றம் ஏற்படுவதை உறுதியாக உணர்வீர்கள்.

இந்த சென்னிமலை திருத்தலத்தில் சனிதேவரின் வாகனமாக சொல்லும் காகம் பறக்காது என்பது கலிகாலம் என்று சொல்லும், இன்றளவும் உள்ள அதிசயம், என்பதை இங்கு சென்று வந்த பிறகு உங்களால் தெரிந்து கொள்ள முடியும்.

சனிதேவரால் நிகழ இருக்கும் அசுப பலன்கள் குறைவதற்கும், மங்கள நாதனால் ஏற்படும் அசுப பலன்கள் மாறுவதற்கும் அவசியம் சென்று தரிசிக்க வேண்டிய திருத்தலம், சென்னிமலை என்பதை மனதில் பதிய வைத்துக் கொள்ளுங்கள்.

சிரமமான சூழலில் இருப்பவர்கள் அவசியம் சென்று வாருங்கள். மற்றவர்கள் வாய்ப்பு கிடைக்கும் போது சென்று வர தவறிவிடாதீர்கள்.

இந்த திருக்கோயிலின் அதிசயங்கள் மற்றும் தல வரலாறு இவைகளை வலை தளங்களில் இருந்து நீங்கள் தெரிந்து கொள்ளலாம். ஆனால் பயனுள்ள சோதிட குறிப்புகளை சொல்லும் ஆலயம் தரும் அற்புதங்களை பால சோதிடத்தில் மட்டும் தான் கிடைக்கும் என்பதை வாசக அன்பர்கள் நன்கு அறிவார்கள்.

இன்னொரு பயனுள்ள சிந்தனையுடன் அடுத்த வாரம்

# -52-

சார் வரன் வேணுமா...! பையன் நல்ல வேலை. கை நிறைய சம்பளம். என சொல்லிக்கிட்டு வந்த கல்யாண தரகர் இப்போ எங்கே இருக்கிறார் என்றே தெரியவில்லை என்று சொல்லும் அளவுக்கு மாற்றங்கள் வந்து விட்டது.

பட்டனை தட்டி பெண்- பிள்ளைகளை தேடும் நிலைக்கு மேட்ரிமோனிகள் வந்து விட்டது. நமக்கு வரன் கிடைக்கிறதோ இல்லையோ அவர்களுக்கு வியாபாரம் கிடைக்கிறது என்று சொல்லிட போறீங்க.. அவர்களுக்கும் தொழில் நடக்க வேண்டாமா?

இப்போதெல்லாம் ஆண் பிள்ளைகளுக்கு பெண் கிடைப்பதே குதிரை கொம்பாக இருக்கிறது என்று சொல்றாங்க.. பத்து நாட்கள் நடந்த திருமணங்கள் இப்போதெல்லாம் பத்து நிமிடத்தில் நடந்து முடிகிறது. கல்யாண சத்திரத்தில் நடந்தது ஒரு காலம் இப்போதெல்லாம் காவல் நிலையத்தில் நடந்து முடிந்து விடுகிறது.

ஆணும் பெண்ணும் சந்தித்து பேசி பழகும் சூழல் அதிகமாக சில இடங்களில் நெருக்கமாகவும் அமைந்து விட்டபடியால், காதல் திருமணங்கள் என்ற பெயரில் அவை அதிகமாகிவிட்டன. ஜாதி, மதம் குலம், கோத்திரம் என பார்த்தவர்கள் கூட இப்போதெல்லாம் பணம் ஒன்றையே பார்த்து காதலுக்கு பச்சைக் கொடி காட்டி விடும் பெற்றோர்களும் இருக்க தான் செய்கிறார்கள்.

என்னிடம் சோதிடம் பார்க்க வரும் பலரும் எப்போ சார் திருமணம் ஆகும் என்ற கேள்வியுடன் தான் வருகிறார்கள் என சோதிடர்கள் சோர்ந்து போகும் அளவிற்கு பெண் ஜாதகம் தட்டுப்பாட்டில் இருக்கிறது போல என்று சொல்ல தோன்றுகிறது.

பண்டைய நாளில் சொல்லும் தசவித பொருத்தம்எனும் பத்து பொருத்தங்கள் பார்த்து செய்யும் எத்தனை திருமணங்கள் கைகூடி கௌரவமாக வாழ்கிறார்கள் என்று கேட்கும் நிலையில் உள்ள

விற்கும் மால்கள் அல்லது கண்காட்சி கூடம் என ஆகி விட்டன திருமணத்திற்கு முன்பே டேட்டிங் கலாச்சாரம், இணைய வழி காதல், என தொடர்ந்து வெளி நாட்டில் உறவு மற்றும் உணர்வு நிலை மாறி இதே போல சேர்ந்து வாழும் கலாச்சாரத்திற்கு மக்கள் பழகி தயாராகி கொண்டு இருக்கிறார்கள் என நிலைமைக்கு ஏதோ ஒரு விதத்தில் தள்ளப்படுகிறார்கள்.

திருமணத்திற்கு (Hindu Marriage Act) சட்டம் இருப்பது போல, விவாகரத்துக்கு சட்டமும் குடும்ப நீதி மன்றமும் இருக்கிறது. இது சரியா தவறா என்ற வாதத்திற்கு போவதற்கு முன், இல்லறத்தின் அடிப்படை கூறே அறம் வளர்த்தல் தான் என்ற அடிப்படையை புரிந்து கொள்ள வேண்டும்..

இதை இன்றைய சூழலில் எத்தனை குடும்பங்கள் அல்லது எத்தனை இளைய பட்டாளங்கள் தெரிந்து இருக்கிறது என நினைக்கிறீர்கள். சரி அப்படின்னா கல்யாணமே பண்ண கூடாதா என்று கோபமாக கேட்க வருகிறீர்கள் புரிகிறது.

தசவித பொருத்தம் என காலம் காலமாக பார்த்து வந்த சிந்தனையில் மாற்றம் வந்து வேதை பொருத்தம் யாமச் சுக்கிரன் என்று பார்க்கும் நிலையில் இருந்தவர்கள் திருமண முஹூர்த்தம் மட்டுமல்லாது கல்யாண மண்டபங்கள் கிடைக்காத நிலை, கையில் டிக்கெட் உடன், கல்யாணம் எப்போ ஆகும், வெளிநாட்டுக்கு எப்போ போகலாம் என்ற அவசரம என பல சூழ்லையில் சாந்தி முகூர்த்தத்திற்கு மட்டும் நேரம் குறிக்க வேண்டிய கட்டாயத்தில் இன்றைய சோதிடர்கள் இருந்து விட்டார்கள் போல என சொல்ல தோன்றுகிறது.

இவைகளை எல்லாம் கொஞ்சம் ஓரமாகவைத்து விட்டு, சொல்ல வரும் சிந்தனைகளை பாசிடிவ் கோணத்தில் எடுத்துக் கொள்ள பாருங்கள். இவை சரியாக இருக்கிறதா என்று சொல்லுங்கள். ஆக, பார்க்க வேண்டிய பொருத்தங்கள் இருவரின்

அன்பு சார்ந்த உணர்வு நிலை
உறவு சார்ந்த உணர்வு நிலை
மன நிலை,
பண நிலையை
குண நிலை
காதல் நிலை
சம்பத்து நிலை
தோஷ நிலை
ஒற்றுமை நிலை
அற நிலை

என்ற பத்து நிலைகளை பத்து திசைகளை மனதில் கொண்டு, ஜாதகத்தினை ஆய்வு செய்து அதற்கேற்ப அவர்களின் இயல்பு நிலைகளை எடுத்து சொல்லும் போதே இந்த திருமணம் நிலைத்து நிற்குமா என்பது தெரிந்து விடும்.

இந்த ஒவ்வொன்றையும் எவ்வாறு பார்க்க வேண்டும் என்பதை சர்ப்ப கிரக நிலையை அடிப்படையாக வைத்தே சொல்லிவிட முடியும் என்றாலும், வாய்ப்பு கிடைக்கும் போது, தனித்தனியாக ஒவ்வொன்றாக சிந்திக்க வைத்துக் கொள்வோம்.

மணப்பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் தான் திருமணத்தில் மாலை போடுவார்கள் ஏன் தெரியுமா என கேட்டால், அடையாளம் தெரிவதற்காக என்று கிண்டலாக பதில் சொல்லுவார்கள். உண்மையில் அவர்களை இறைவனாக அம்மையப்பராக கருதி தான் அவ்வாறு செய்கிறார்கள். என்று சொன்னால் நம்மை வேறு விதமாக பார்ப்பார்கள்.

சப்தபதி முடிவதற்கு முன் மண மக்களை தொட கூடாது என்றே சாத்திர முறை உண்டு, ஆனால் வெளிநாட்டில் இருந்து பாஸ் வந்து இருக்கிறார் என்று பரிசு பொட்டலத்தை வாங்கி கொண்டு இந்திய கலாச்சாரத்தில் சேராத பழக்கமான கையை

திருமணத்திற்கு நட்பு, உறவு என எல்லோரையும் திருமணத்திற்கு அழைக்கிறார்களே எதற்கு தெரியுமா? என கேட்டால், மொய் பணம் வசூல் செய்வதற்கு என கிண்டாலாக பதில் சொல்லுவார்கள். உண்மையில் இறை இன்பதை காட்டி, ஜோதியில் கலப்பதற்காக என்று சொன்னால் நம்மை வேறு விதமாக தான் பார்பார்கள்.

ஆச்சாள்புரத்தில், ஞான சம்பந்தர் திருமணத்திற்கு வந்தவர்கள் அத்துணை பேரும், சிவ ஜோதியில் கலந்தனர் என்பது தமிழ் சொல்லும் வரலாறு என்பது உங்களுக்கு தெரிந்து இருக்கும்.

திருமணம் என்பது வாழ்வில் ஒரு பந்தத்தை ஏற்படுத்தி, சந்ததிகளை பெற்று, குடும்ப விருத்திக்காக என நினைத்து கொண்டு இருக்கிறார்கள். அது அப்படி அல்ல என்ற அடிப்படையை புரிந்து கொண்டால் மட்டுமே, வதுவுக்கும் வரணுகும், முதிர்ச்சி வந்துள்ளது என அர்த்தம்.

அது அல்லாமல், உடல் ரீதியான, மன ரீதியான சட்ட ரீதியான முதிர்ச்சியை திருமணத்திற்கு உகந்தது என கொள்வது பாவம் மட்டுமல்ல ஆபத்தானதும் கூட என்று சொன்னால் அய்யரே கொஞ்சம் அந்த பக்கம் உட்காருங்க என்று நம்மை ஒதுக்கி விடுவார்கள்.

அற வாழ்க்கையின் தொடக்கம் இல்லத்தில் தொடங்க வேண்டும் என்பதால் தான் இல்லறத்தை முதலில் வைத்து வள்ளுவமும் சொல்கிறது என்ற அடிப்படையை புரிந்து கொண்டு, திருமண சடங்கு செய்ய தொடங்கும் முன் ஒவ்வொருவரும் தங்கள் பிள்ளைகள் அற வாழ்க்கையில் நடத்த முதிர்ச்சி பெற்று இருக்க வேண்டும் என்ற அடிப்படையை புரிந்து கொண்டால் அவர்கள் வாழ்க்கை மட்டுமல்ல சமூக நிலையும் மேம்படும் என்ற அடிப்படையை விளங்கி கொள்ள வேண்டியது அவசியம்.

ஜாதக ரீதியாக 2-7-9-10ஆம் இடங்களை பார்த்து எப்போது

கேது, புதன் மற்றும் குருவின் நிலையை வைத்து காதல் நிலையை சொலிவிட முடியும்.

மறுக்கப்பட்ட திருமணம், மறுமணம், காந்தர்வ விவாகம் என ஜாதகத்தை பார்த்தவுடனேயே சொல்லி விட முடியும்.

உதாரணமாக சொல்ல வேண்டும் என்றால், புனிதவதியார் என்ற காரைக்கால் அம்மையார் திருமண வாழ்க்கை சோபிக்கவில்லை. இதனை முன்பே சொல்லும் வடித்து சொன்ன சேக்கிழார் மயிலுக்கும் காளைக்கும் திருமணம் என மண மக்களை பாடி இருப்பார். இது போல பல உதாரணங்களை தமிழில் காட்ட முடியும் என்றாலும் திருமணத்திற்கான அடிப்படை கூறுகளை புரிந்து கொண்டால் மண வாழ்க்கை நிம்மதியாக மகிழ்ச்சியாக அமையும். நல்ல சமூதாயம் மலரும் எனபதை புரிந்து கொண்டால் மகிழ்ச்சி.

நல்லதே நினைப்போம் நல்லதே நடக்கும்.

-
-
-
-
-
-
-
-
-
-
-
-
-

# -53-

“காக்கை குருவி எங்கள் கூட்டம்...” என்பது பாரதியின் வாக்கு

காக்கை என்பதும் நமக்கு நினைவில் வருவது, முன்னோருக்கு உணவு படைக்க சொல்லும் ஒரு பரிகார செயல்.

காக்கை தான் சனைச்சரனுக்கு வாகனம் என்று வேற சொல்லி வைத்து இருக்கிறார்கள்.

அது சரி.. “இதெல்லாம் என்னங்க அய்யா, முன்னோருக்கு சோறு போடுவதும் காக்கைக்கு சோறு வைப்பதும்..” என்பது போல கேட்பவர்களும் இருக்க தான் செய்கிறார்கள்.

கருப்பு நிறம் என்றால், அது சனைச்சரனுக்கு என சொல்வது உண்டு. இங்கே நிறத்தை தான் சொன்னது.. நீங்கள் வேற எதையாவது நினைத்து கொள்ள போகிறீர்கள்.

காக்காவை ஏன் சனைச்சரனுக்கு என சொல்றாங்க என விவரம் தெரியாமல் கேட்பவர்களும் இருப்பார்கள். அவர்களுக்காக தான் காக்காவை வைத்து இந்த வார சிந்தனை தரலாம் என்று தோன்றியது. இதற்காக பன்னாட்டு விருது பெற்ற சூழலியல் நிபுனர் கோவை திரு இரத்தினசபாதி அவர்களை சந்தித்து தகவல்களை சேகரித்து வந்தோம்.

இந்த தொடர்பு செய்திகளை வைத்து சொல்லும் முன் காக்காவை பற்றி கொஞ்சம் தெரிந்து கொள்வோம்.

ஒரு ஜாடியில் தண்ணீர் அடி மட்டத்தில் இருந்தது.. தாகம் கொண்ட காகம் ஒன்று ஜாடியில் கற்களை போட்டது. ஜாடியின் அடி மட்டத்தில் இருந்த அந்த தண்ணீர் மேலே வந்தது காகம் குடித்து விட்டு பறந்து சென்றது என புத்திசாலி காகம் என்ற கதையை சிறு பிள்ளைகளாக இருக்கும் போது, நமக்கு சொல்லி கொடுத்து இருப்பார்கள்.

Water displacement theory என்ற ஆர்கிமிடிஸ் கண்டு பிடித்த ஒரு

போக்கில் சொல்லி கொடுத்து விட்டு இருப்பார்கள் நமது முன்னோர்கள்.

அப்படின்னா காக்காவுக்கு அறிவு இல்லையா என்று கேட்டு விட போறீங்க... காக்கை தன் இனத்தை கூவி அழைத்து உணவை பகிர்ந்து கொள்ளும் என்பது போல சொல்லி இருப்பார்கள்.. அது போல ஒற்றுமையாக இருக்க வேண்டும் என்று கூட சொல்லி தந்து இருப்பார்கள்.

“காக்கை கரவா கரைந்து உண்ணும்” என வள்ளுவம் சொன்ன இந்த காகம் பாருங்க.. அசைவ உணவு கிடைத்தால் காகம் இது போல கூவி அழைத்து உண்ணாது என்பது தான் உண்மை. இது எப்படிங்க ஐயா என கேட்காதீர்கள் திருக்குறள் சொல்ல வந்த பொருள் வேறு இது பற்றி இன்னொரு வாய்ப்பில் சிந்திக்க வைத்துக் கொள்வோம்.

சரி, அமாவாசை என்றால் காகத்திற்கு உணவு வைத்தல், முக்ன்னோர் வழிபாட்டுக்கு காகத்திற்கு உணவு தருதல் என சொல்றாங்களே அதுக்கும் இதுக்கும் என்ன என கேட்கும் முன்பு காகத்தின் இயல்பு பற்றி கொஞ்சம் தெரிந்து கொள்வோம்.

காகம் தொலை தூரத்தில் உள்ள உணவை வாசனையில் பிடித்து கண்டு கொள்ளும். யானையும் இது போல தான் என்றால் இந்த இணைப்பு சிந்தனை ஆச்சரியமாக தான் இருக்கும். நீண்ட தூரம் நீச்சல் அடிக்கும் யானை, தண்ணீர் இருக்குமிடத்தை சுமார் 6 கிலோமீட்டர் தூரத்தில் இருந்தே அறிந்து கொள்ளும் திறன் கொண்டது.

அதனால் தான் சனியால் வரும் பாதிப்புகளுக்கு பிள்ளையாரை வழிபட சொல்றாங்க என்ற சிந்தனையை இன்னொரு வாய்ப்பில் சிந்திப்போம்.

மற்ற விலங்குகள் போல பொது வெளியில் இனப்பெருக்கத்திற்காக தன் இணையுடன் சேராது இந்த காகம்.

காகம் எந்த திசையில் பார்த்து கத்துகிறது என்பதை பொறுத்து பலன் சொல்லும் வழக்கமும் நம்மவர்களிடம் இருந்தது. இப்பவும் இருக்கிறது.

காகம் தன் இருப்பிடத்தை விட்டு வெளியே மற்ற பறவைகளை போல பறந்து செல்லாது. சென்னையில் இருந்து காகத்தை பிடித்து கோயம்புத்தூரில் விட்டு விட்டால் அதனால் அங்கே வாழ முடியாது என்பது போல இன்னும் நிறையா சொல்லிக்கிட்டே போகலாம்.

காகம் தலையில் அடிப்பது, காகம் எச்சமிடும் இடத்திற்கு கூட பலன் சொல்லுதல், வேறு எந்த பழத்தையும் சாப்பிடாத காகம், உலர் திராட்சை பழத்தை மட்டும் சாப்பிடும், மனிதன் தன்னை தொட கூடாது என்ற ஒழுக்கம் கொண்டது முட்டை இடும் காகத்திற்கு அடை காக்க தெரியாது. என்பது போல இப்படி இன்னும் நிறையா சொல்லிக்கிட்டே போகலாம்.

அது சரி இந்த காகத்திற்கும் முன்னோர் வழிபாட்டுக்கும் என்ன தொடர்பு என்று சிந்திப்போம்.

கர்ம வினைகளின் தொடர்பு தான் பிறப்பு-இறப்பு. பிறந்தவர் இறப்பதும் இறந்தவர் பிறப்பதும் என்பது எல்லா மதத்திலும் உள்ள செய்திதான். புனித வெள்ளி அன்று மரித்த இயேசு பிரான் உயிர்த்தெழுந்த நாளை ஈஸ்டர் என கிருத்துவ தோழர்கள் வழக்கமாக கொண்டிருப்பது நாம் அறிந்ததே. இந்த கர்ம வினைகளை செயல்படுத்துபவர் கர்ம காரகன் என சொல்லும் சனி தேவர் என்பது சோதிட அன்பர்களுக்கு தெரிந்து இருக்கும்.

9ம் இடத்தை தர்மத்திற்கும் 10ம் இடத்தை கர்மத்திற்கும் சொல்வது சோதிட ஆர்வலர்களுக்கு தெரிந்து இருக்கும். உயர் தரமான யோகம் என சொல்லும் தர்ம கர்மாதிபதி யோகம் பற்றி இன்னொரு வாய்ப்பில் சிந்திப்போம்.

கால புருஷ தத்துவத்தின் படி 9ம் இடம் குருவின் வீடான

கொடுத்து இருப்பதே இந்த சிந்தனையின் அடிப்படையில் என்பதை புரிந்து கொண்டால், கர்ம காரகன் சனி என்பதை மனதில் நிறுத்தி வைத்துக் கொள்ள முடியும். அது சரி, காகத்திற்கும் சனிக்கும் என்ன தொடர்பு என கேட்க வருகிறீர்கள் புரிகிறது.

சூழலியல் நிபுணர்களுக்கும் விவசாய அன்பர்களுக்கும் தெரிந்து இருக்கும். இந்த காகம் தான் விதைகளை சேகரித்து இன்னொரு இடத்தில் விதைத்து பல விருட்சங்களை உருவாக்கி இருக்கிறது. அவை உணவுக்காக தான் அப்படி செய்கிறது அது அறியாமையில் இயல்பில் செய்கிறது என்று கடவுள் நம்பிக்கை அல்லது சோதிட நம்பிக்கை இல்லாதவர்கள் சொன்னாலும், மற்ற பறவைகள் செய்யாததை இந்த காகம் செய்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது.

பசுமையை வளர்த்து புதுமையை படைக்கும் முயற்சியில் காகத்திற்கு இருக்கும் பங்கு முக்கியமானது. அதனால் தான் காகத்திற்கு உணவு படைக்க சொல்கிறார்கள். காகத்திற்கு உணவு படைக்கும் போது, அது தன் இயல்பான குணத்தினால், ஒன்றை ஒரு இடத்தில் உண்டு, அதை இன்னொரு இடத்தில் இட்டு, அதை இயற்கை வளர்த்து எடுக்கும் கர்ம காரகனாக இருப்பதால் தான், தினமும் காகத்திற்கு சோறு வைத்து விட சொன்னார்கள். என்றாவது ஒரு நாள் நாம் படைக்கும் உணவில் இருந்து ஒரு விருட்சம் உருவாகி விடாதா என்ற நம்பிக்கை.

இதனால் கர்ம வினைகள் அகலும் என, காகத்தை வைத்து water displacement என்ற அறிவியல் சிந்தனையை சொன்னது போல சொல்லி இருக்கிறார்கள் என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

நல்லதே நினைப்போம் நல்லதே நடக்கும்.

-

-

-

# -54-

கல்யாணம் கிரகபிரவேசம் போன்ற சுப நிகழ்ச்சிகளுக்கு போயிருப்பீங்க...

அங்கே மண்டபத்திற்கு போன உடன் ஒரு நாலு பேர், நின்று கொண்டு, டேபிளில் பன்னீர் தெளித்து, சந்தனம் கொடுத்து,கல்கண்டு தந்து, பூ முடிப்பையும் தருவார்கள். இப்போதெல்லாம் பேட்டரியில் ஓடும் ஒரு பொம்மையை நிற்க வைத்து எல்லோரையும் கும்பிடுவது போல வைத்து இருப்பார்கள். இது சரியா தவறா என்று சொல்ல வரவில்லை.

சுப நிகழ்ச்சிகளுக்கு சென்று வரும் போது, ஒரு தட்டில், வெற்றிலை, பாக்கு, பழம் தேங்காய், மற்றும் பூ வைத்து தருவார்கள் இதை தாம்பூலம் தருதல் என்ற சடங்காக வைத்து இருப்பார்கள்.

இது போன்ற தாம்பூலம் தரவில்லை என்றாலோ அல்லது இதில் ஒன்று குறைந்தாலோ, அவ்வளவு தான் மண்டபமே அமர்க்களப்படும் அளவுக்கு சண்டை வந்து விடும்.

இப்போதெல்லாம் அப்படி இல்லை.. எல்லாவற்றையும் ஒரு நெகிழி அதாங்க பிளாஸ்டிக் பையில் போட்டு டேபிளில் வைத்து பக்கத்தில் குழந்தைகள் அல்லது இள வயது பெண்களை கையில் மொபைலை கொடுத்து ஆளுக்கு ஒரு பை தான் எடுத்து செல்ல வேண்டும் என சொல்லி, நிற்க வைத்து விடுகிறார்கள். போகிறவர்கள் டோக்கனை காட்டி எடுத்துக் கொண்டு போவது போல, ஆளுக்கு ஒரு பையை எடுத்துக் கொண்டு போகிறார்கள்.

இது என்னவோ சம்பிரதாயத்திற்கு தருவது போல இருக்கிறது. என்று நினைக்க போறீங்க.. உண்மையில் அப்படி தான் இருக்கு. தாம்பூலம் தருவது என்பது இப்படி இல்லை என்பதை முதலில் புரிந்து கொள்ளுங்கள்

அது சரிங்க.. கால சூழலுக்கு ஏற்ப வந்த மாற்றங்கள் தானே. இதை பெரிதாக சொல்ல வேண்டுமா என்று நீங்கள் கேட்க வருகிறீர்கள் புரிகிறது. அதை சொல்வதற்கு தான் இந்த வார பதிவு.

இறைவனை வழிபட அஷ்ட புஷ்பங்கள், பிறப்பிலி இறைவனை வழிபட வேண்டிய அட்ட வீரட்ட தலங்கள், அஷ்ட மா சித்துக்கள், அஷ்ட கர்மங்கள் என்ற வரிசையில் அஷ்ட மங்களங்களும் உண்டு.

அந்த அஷ்ட மங்களங்களில் முதலில் வருவது இந்த தாம்பூலம் தான். சாப்பிட்ட பிறகு தாம்பூலம் தரித்தல் என்ற சடங்கே இந்து வாழ்க்கை முறையில் உண்டு என்று நம்மில் எத்தனை பேருக்கு தெரிந்து இருக்கும் என்று நினைக்கிறீர்கள்.

இப்பவும் சில பெரிசுகள், இதை பழக்கத்தில் வைத்து இருக்கிறார்கள் என்றாலும், சிலர் இதில் இன்றைய நாளில் சுவைக்காகவோ அல்லது வேறு காரணத்திற்காகவோ புகையிலையையும் சேர்த்துக் கொள்கிறார்கள். அது ஆன்மாவிற்கு மட்டுமல்ல ஆயுளுக்கும் கெடுதியை செய்ய கூடியது என்பதை தெரிந்து கொண்டால் நல்லது.

தாம்பூலம் என்றதும் ஏதோ வெற்றிலை வைத்தோமோ இரண்டு பழத்தை வைத்தோமா என்று இருக்க கூடாது அதற்க்கான சில வழி முறைகளை தருகிறோம் சரியாக உள்ளதா சொல்லுங்கள்.

ஒளி கிரகமான சூரிய, சந்திரனையும் இருள் கிரகமான ராகு கேதுவும் நீங்கலாக, மீதம் உள்ள பஞ்ச பூதங்களை குறிக்கும் ஐந்து கிரகமும் இந்த தாம்பூலத்தில் இடம்பெறும் என்பதாலேயே இது சுப நிகழ்ச்சிகளில் முக்கியத்துவம் பெறுகிறது.

ஏன் இருள் கிரகங்களையும் ஒளி கிரகங்களையும் நீங்கலாக என்று யோசித்து பாருங்களேன்.. எங்கே ஒளி இருக்கிறதோ அங்கே எல்லாம் இருள் இருக்கும். “ஒளிக்கும் இருளுக்கும் இடம் ஒன்றே”

சிவாச்சாரியார் அருளிச்செய்த “கொடிக்கவி” என்ற நூலில் காணாலாம்.

சரி இந்த தாம்பூலம் எப்படி முறையாக தர வேண்டும் என பார்க்கலாம். தாம்பூலம் தரும் போது, தருபவர் கிழக்கு பார்த்தபடி இருந்து தர வேண்டும். பெறுபவர் மேற்கு நோக்கி நின்று பெற வேண்டும். அது சமயம் வெற்றிலை நுனி பகுதி கிழக்கு நோக்கி இருக்க வேண்டும் அதாவது பெறுபவரை நோக்கி இருக்க வேண்டும்.

ஒரு வெற்றிலை கொடியில் இருந்து வரும் வெற்றிலை எப்படி பெறுபவரை நோக்கி நுனி இருக்கிறதோ அது போல இருந்து தர வேண்டும்.

ஆனால் தாம்பூலம் தரிக்கும் போது, காம்பையும் நுனியையும் கிள்ளி எரிந்து விட்டு, நடுவில் உள்ள நரம்பை கிழித்து அதில் மங்கள பொருட்களை வைத்து உமிழ்நீருடன் கலந்து சாப்பிட வேண்டும்.

இதில் இடம் மாறி கொடுத்தால் அதன் பலன் மாறும் என்பது தான் முன்னோர்கள் நமக்கு சொல்லி தந்தபாடம்.

முக்கனி என சொல்லும் மா பலா வாழை என்ற வரிசையில் மாவிலையை வாசலில் கட்ட வேண்டும் இதில் இலை வாசலை பார்த்து கட்டி இருந்தால் சுபகாரியம், வீட்டை பார்த்து இருந்தால் அசுப காரியம் என்று பொருள். பலா இலையில் தொன்னை. (தொன்னை என்பது இன்றைய நாளில் நாம் புரிந்து கொள்ளும் படி சொல்ல வேண்டும் என்றால் கட்டோரி அல்லது கிண்ணம்) வாழை இலையில் சாப்பாடு என தனியாக இதில் உள்ள சோதிட சிந்தனையை இன்னொரு நாள் சிந்திக்கலாம்.

அது போல இந்த வெற்றிலையும் என்பதை புரிந்து கொண்டால் நல்லது. வெற்றிலையை தனித்து தர கூடாது என்பதை மனதில் பதித்து கொண்டு, இதனை சோதிடத்தில், சூரியனுடனோ சுக்கிரனுடனோ சேர்ந்து தான் புதன் இருக்கும். என்பதை சேர்த்து சிந்திக்க வைத்துக் கொள்ளுங்கள்.

அதனால் தான் பாக்கு (அல்லது சீவல்) இல்லாமல் வெறும் வெற்றிலை தர கூடாது. என்பது மரபாக சொல்லி வைத்து இருக்கிறார்கள்.

தனித்த புதன் கூட கூடுதல் பலன் என சொல்லுவார்களே! பத்ர யோகம் என்று வேறு சொல்லுவார்களே என கேட்க வருகிறீர்கள் அதை சோதிட அன்பர்கள் சிந்தனைக்கு தந்து விடலாம்.

அதற்கு மருந்துக்கு பயனாகும் வெற்றிலையை வைத்து சிந்தித்தால் இதன் விவரம் புரியும். வெறும் வெற்றிலையை வெந்நீரில் போட்டு கொதிக்க வைத்து அருந்துதல், வெற்றிலையுடன் உப்பு மிளகு சேர்த்து சுவைத்தல் வெற்றிலையை பற்று போடுதல் போன்ற மருத்துவ குறிப்புகளை வைத்து சிந்திக்கலாம். இதனை இன்னொரு சந்தர்ப்பத்தில் மருத்துவ சோதிடத்தில் வைத்து சிந்திக்க வைத்துக் கொள்வோம்.

“பத்ரம்” என்றால் சமஸ்கிருதத்தில் இலை என்று தானே பொருள் என்பதை சொல்லாமலே விளங்கும். தனித்த புதன் பத்ர யோகம் இவைகளை, மருத்துக்கு பயனாகும் வெற்றிலையுடன் வைத்து சிந்தித்து பாருங்கள்.

துவர்ப்பு தன்மை கொண்டது பாக்கு, அல்லது சீவல், இது செவ்வாய் அம்சம். பூ சுக்கிர அம்சம். வாழைப்பழம் குரு அம்சம் தேங்காய் சனி அம்சம். சிதறு காய் போடுவது, முழு தேங்காயை இறைவனுக்கு முன் உடைத்து நிவேதனம் செய்வது என அதனை தனியாக இன்னொரு சந்தர்ப்பத்தில் சிந்திக்க வைத்துக் கொள்வோம்.

ஆக இந்த ஐந்து கிரகத்தையும் இந்த தாம்பூலத்தில் வைத்து அறிந்து கொள்ள முன்னோர்கள் சொல்லி தந்த சோதிட குறிப்புகளே இவை என்றால் ஆச்சரியமாக இருக்கிறது அல்லவா.!

அது சரி சில வடக்கிந்தியர்கள் பீடா போடுவதை தவிர இப்போ யாருங்க சார் வெற்றிலை தாம்பூலம் போடுகிறார்கள். TAKE HOME மாதிரி எங்களுக்கு ஏதாவது சொல்லுங்க என்று கேட்பது புரிகிறது.

சர்ப்ப கிரகங்களால் பாதிப்பு இருப்பவர்கள், சர்ப்ப கிரகங்கள் நடப்பு தசா புத்தியில் இருப்பவர்கள், ராகு கேது பெயர்ச்சியில் சிரமங்களை இந்த சனிப்பெயர்ச்சிக்கு பிறகு கூடுதல் பணச்சுமை தேவையில்லாத செலவு என சந்தித்துக் கொண்டு இருப்பவர்கள் விநாயக பெருமானுக்கு வெற்றிலை மாலை சாற்றுங்கள்,

குறிப்பாக மாலை கட்டும் போது ஒவ்வொரு ஜோடி வெற்றிலையுடனும், ஒரு ஏலக்காய், ஒரு மலர் உடையாத இலவங்கம்/கிராம்பு சேர்த்து வைத்து மாலை கட்ட வேண்டும்.

இந்த வெற்றிலை மாலை எண்ணிக்கை ஒற்றைப்படையில் வரும் படி அமைத்து விநாயக பெருமானுக்கு சார்த்துங்கள். உங்கள் சுமை குறைந்து நிம்மதி கிடைக்கும்.

நல்லதே நினைப்போம் நல்லதே நடக்கும்.

# - 55 -

பரிகாரங்கள் என்றால் என்ன? என தொடங்கியதுமே... சார் பரிகாரமா?

கொஞ்சம் இருங்க இதோ வந்துடறேன்னு சொல்லிட்டு போறவங்க தான் அதிகமாக இருப்பாங்க.. ஏன் என்று கேட்டால், “இதுவரை நான் செய்யாத பரிகாரம் இல்லை ஆனால் பாருங்க பிரச்சனைக்கு தீர்வு இல்லை” என்று. இன்னும் சிலர், “பிரச்சனை தீர தான் பரிகாரம் செய்கிறோம். ஆனால் பாருங்க இப்போ பிரச்சனை பூதாகாரமாக வந்து நிற்கிறது. எனக்கு நம்பிக்கையே போச்சு சார்” என்று நம்மிடம் குறைப்பட்டு கொள்வார்கள்.

உண்மையில் ஒரு பரிகாரங்களை சொல்லும் போதும், அதை செய்யும் போதும் கவனிக்க வேண்டிய சில என உள்ளது அதனை பற்றி இந்த வாரம் சிந்திக்கலாம் என்று தோன்றியதை உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன்.

சமூக வலைப்பதிவு, இலவசமாக கிடைக்கும் சானல் என ஏகப்பட்டது இப்போ கையடக்க பெட்டியில் கிடைக்கிறது . அவரவர்கள் படித்ததையோ, மற்றவர்கள் படைத்ததையோ பகிர்ந்து கொண்டு இருக்கிறார்கள். அதை சரி என்றோ தவறு என்றோ சொல்லவில்லை. மாறாக பரிகாரம் என்பதும் அதன் நிலை குறித்தும் மட்டுமே சிந்திக்க எடுத்துக் கொள்வோம்.

மணி, மந்திரம், ஔஷதம் என்று சொல்வதை நீங்களும் கேட்டு இருக்கலாம். மணி என்பது சில வழிபாட்டு சாதனங்களையும், மந்திரம் என சில சில சொற்கள் வாக்கியங்கள் எனவும் பீஜ ஒலி சேர்த்து அல்லது சேர்க்காமல் என சில வற்றை சொல்ல சொல்வது ஔஷதம் என்பது மருந்து என்று பொதுவாக சொல்லுவார்கள். அதை தவறு என்றோ சரி என்றோ கருத்து சொல்ல தேவையில்லை. நமது சிந்தனையில் வருவதை உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன்.

இந்த மந்திரத்தை இத்தனை முறை சொல்ல வேண்டும், இந்த

ஏற்றுதல், பூசணிக்காய், தேங்காய் என அவரவர்கள் விளக்கு ஏற்றுவது, எள்ளு பொட்டல விளக்கு, வெண் கடுகு விளக்கு, அடுத்தவர் ஏற்றிய விளக்கில் இவர்கள் ஏற்றுவது, என சொல்ல நிறையா இருக்கு. இன்னும் சில இடங்களில் இத்தனை விளக்கு ஏற்றினால் இன்ன பலன் என எழுதி போட்டு வியாபாரம் செய்து கொண்டு இருப்பார்கள். இத்தனையும் திருக்கோவில்களில் ஆங்காங்கே நடைபெறுவதை நாமும் பார்த்துக் கொண்டு இருப்போம். ஆனால் இவைகளை செய்யலாமா கூடாதா என்று எப்போதாவது நம்மில் எத்தனை பேர் சிந்தித்து இருப்போம்?

எல்லோரும் நன்றாக வளமை பெற்று வாழ வேண்டும் என்ற ஆவல் இயல்பானது தான்.. அது அவர்கள் உரிமையும் கூட. அந்த உரிமையை கேட்டு பெற நினைக்கும் நம்மில் எத்தனை பேர் கடமை செய்து இருப்போம் என்று மனசாட்சியை தட்டி கேட்டு பாருங்கள்.

ஆனால், பிரச்சனைகள் வரும் போது, அதை எதிர்கொள்ள பயந்து தப்பித்துக் கொள்ள அல்லது வேறு முறைகளை தேடி ஓடி ஒளிய தான் பலரும் நினைக்கிறார்கள். நாம் செய்த கர்ம வினை தானே என்று எத்தனை பேர் முதிர்ச்சியுடன் இருக்கிறார்கள் சொல்லுங்கள்.

“நன்று ஆம்கால் நல்லவாக் காண்பவர்
அன்று ஆம்கால் அல்லல் படுவது எவன்”.

என திருவள்ளுவர் நமக்கு இடித்து காட்டிய பிறகும் இதை சிந்திப்பவர்கள் உண்டோ?

புத்தகத்தை பார்த்து பரிகாரம் செய்வது, இலவச சானல்களில் சொல்வதை கேட்டு செய்வது என செய்வதெல்லாம், உடல் நலம் சரியில்லை என்றால், மருத்துவரை சந்திக்காமல், மருந்து கடையில் மாத்திரை வாங்கி சாப்பிடுவது போன்றது. சிலருக்கு கேட்கலாம் சிலருக்கு அது வேறு மாதிரி அமையலாம்.

உடல் கூறு முறை ஒன்றாக இருந்தாலும், அதன் செயல்பாட்டு முறை நமது வாழ்க்கை முறைக்கு ஏற்ப நிச்சயமாக

ஜாதகருக்கு பொருந்துமா என்று ஆய்வு செய்த பிறகே அனுபவமிக்க சோதிடர் சொல்லுவார்கள். பொதுவாக சொல்லக் கூடிய இறை வழிபாட்டு முறையை யாரும் சொல்லலாம். அதை யாரும் செய்யலாம் என்பதில் மாற்று கருத்து இருக்க முடியாது.

இந்த சமித்து இந்த ஹோமத்திற்கு என சொல்வது போல, இந்த அரிசி இந்த வகை சாப்பாட்டிற்கு என்று சொல்வது போல, இந்த பிரச்சனைக்கு இந்தவகையில் பரிகாரம் செய்ய வேண்டும் என்பது ஒரு முறை.

புரிதல்களுக்காக இப்படி சொல்கிறேன் உங்கள் அனுபவத்தில் சரியாக உள்ளதா என்று சரி பார்த்துக் கொள்ளுங்கள். ரிஷிகள் சொன்ன வழிமுறைகளை பின்பற்றி செய்வது ஹோமம் செய்தல் யாகம் செய்தல் நெருப்பில் இடுதல் அல்லது நீரில் கரைத்தல் என்பது போல இருக்கும். சித்தர்கள் சொல்வதை பார்த்தால் மூலிகை செடிகள் வழியாக பூசைகள் இருப்பது போல இருக்கும். இதில் இது தான் சரி அல்லது அது தான் சரி என்று வாதம் செய்ய கூடாது.நமது ஜாதக கட்டத்தில் ஏற்புடைய கிரக நிலைக்கு ஏற்ப உங்கள் நம்பிக்கைக்குரிய சோதிடர் சொல்வதை புரிந்து கொள்வது போல இருக்க வேண்டும்.

சனி செவ்வாய் சேர்க்கை பெற்றால் இல்லறம் எப்படி சிறக்கும். குரு ராகு சேர்க்கை என்றால் நல்ல பழக்கம் எப்படி வரும். இப்படி சொல்ல நிறைய இருக்கிறது.

எப்படி ஒருவர் 100% நல்லவரும் இல்லை 100% கெட்டவரும் இல்லை என்பதை நடைமுறையில் தெரிந்து கொள்கிறோமோ,. அது போல தான் வினைப்பலன்களும், அவைகளை சரியான விகிதத்தில் கலந்து தான் இறைவன் ஆணை இட்டு இருப்பார்கள். அந்த ஆணையை நவகிரகங்கள் செயல்படுத்தும். அதனால் ஒரு கிரகம் நல்லது மட்டுமே செய்யும் என்றோ தீயதை மட்டுமே செய்யும் என்றோ சொல்லி விட கூடாது. சுப கிரகம் குரு அதனால் வரும் தீமையும் உண்டு. பாவ கிரகம் சனி அதனால் வரும் நன்மையையும்

தமிழால் முடியாதது எதுவும் இல்லை. மூவர் முதலிகள், தமிழில் ஒரு பாட்டு பாடி மூடிய கோவில் கதவுகளை திறந்து இருக்கிறார்கள், இறந்து போனவர்களை உயிருடன் மீட்டு பெற்று இருக்கிறார்கள். தமிழ்க்கிழவி ஔவையார், பட்டு போன பலா மரத்தை ஒரு செந்தமிழ் பாட்டு பாடி மீட்டு தந்து இருக்கிறார்.

இராப்பத்து உற்சவத்தில் பெருமாள் பாசுரம் செவிமடுக்கும் சடங்கு இன்றும் நடைபெறுவது நாம் அறிவோம். சைவ கோவில்களில் வடமொழி பூசனைகள் இருந்தாலும் பஞ்ச புராணம் பாடாமல் பூசைகள் அங்கே முழுமை அடைவதில்லை என்பதை நாம் அறிவோம்.

நமது பரிகார முறைகள் தமிழ் வழி பாடலாக இருக்கும், சில வழிபாட்டு முறைகளாக இருக்கும், உணவு பழக்கமாக இருக்கும், உணர்வு முறை மற்றும் ஒழுக்க நிலைகளாக இருக்கும். இது போல அவரவர்கள் ஒரு சில முறையை கை கொண்டு இருப்பார்கள். என்பதை புரிந்து கொண்டு, அவர்கள் அப்படி சொல்கிறார்களே இவர்கள் இப்படி சொல்கிறார்களே என்று உங்கள் இயலாமைக்கு காரணம் சொல்லிக்கொண்டு இராமல், உங்கள் நம்பிக்கைக்குரிய சோதிடர் சொல்வதை கேட்டு செயல்படுங்கள்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 56 -

இன்றைய நாளில் பெண்களும் சரி.. ஆண்களும் சரி.. முந்தைய நாட்கள் போல இருப்பதில்லையே என்று சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்பு பிறந்தவர்கள் வருத்தமாகவோ, விவரம் தெரிந்து கொள்வதற்கோ சொல்லிக் கொண்டு தான் இருக்கிறார்கள்.

நாகரீகம் என்ற பெயரில் மாற்றங்கள் உடையிலும், உணவிலும், உணர்விலும், மக்கள் நம்பிக்கையிலும், வாழ்க்கை முறையிலும் வந்து கொண்டு தான் இருக்கிறது.

வெட்க பட தெரியாத பெண்கள் வெட்கம் கெட்ட ஆண்கள் என பட்டியலிட்டு சொல்ல பல இருந்தாலும், எதற்காக திருமணம் செய்கிறோம் என்று தெரியாமலே, இயந்திரத்தனமான வாழ்க்கை ஓட்டத்தில், பணம் சம்பாதிப்பது ஒன்றையே குறிக்கோளாக கொண்டு ஓடிக் கொண்டிருக்கிறார்கள் பலர். இயந்திரத்தனமாக எதையோ செய்து விட்டு குழந்தை வந்து விட்டதே என நினைத்தபடி வாழ்க்கை அமையாத போது, மற்றும் பிரச்சனை என வரும் போது, சோதிடரை தேடி ஓடுவதும், தெரிந்தோ தெரியாமலோ குழந்தை பிறந்த பிறகு ஜாதகம், ராசியான பெயர் என்று. தேடுவதும் இயல்பாகி போய்விட்டது.

பிறப்புக்கும் இறப்பும் இடைப்பட்ட கால அளவு தான் வாழ்க்கை. அந்த வாழ்க்கையின் நிகழ்வுகளை சொல்வது தான் ஜாதக கட்டம். அப்படியானால் “பிறப்புக்கு பின்?!” என்று கொஞ்சம் யோசித்து பாருங்கள் (life after death) அது ஒரு தனி உளவியல் ஆராய்ச்சி. (para psychology) என்று சொல்லுவார்கள். பூர்வ ஜென்ம புண்ணியம் பிறப்புக்கு மட்டுமா, இறப்புக்கும் தானே என்று இயல்பான அறிவு தேடலில் கேட்டு பாருங்கள்.

உண்மை தான். பிறப்பு என ஒன்று இருந்தால் நிச்சயம் இறப்பு என ஒன்று இருந்தே ஆக வேண்டும். கிருத்துவர்கள் வணங்கும்

“ஜெனனி ஜென்ம சௌக்யானாம் ...” என ஜாதகம் எழுதி பலன் அறிந்து கொள்ளும் பலரும் உயிர் பிரிந்த பிறகு என்று சிந்திக்க முன் வருவது இல்லை என்று தான் சொல்ல தோன்றுகிறது.

பிறப்பை போல தானே இறப்பும் ஒரு நிகழ்வு என்றாலும், அது பற்றிய சில சிந்தனைகளை இந்த வாரம் சிந்திக்க எடுத்துக் கொள்வோம்.

பிறப்புக்கு காட்டும் கவனத்தை பலரும் இறப்பிற்கு காட்டுவதில்லை. இருந்தார், இப்போ இறந்தார் அவ்வளவு தான். சரி விடுங்க, அடுத்த வேலையை கவனிப்போம் என சென்று விடுகிறார்கள். இதனை பத்தாம் திருமுறையில், திருமூலர்,

ஊரெலாங் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணம் என்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டு இட்டு
நீரினில் மூழ்கி நினைப்பு ஒழிந் தார்களே .

என பாடி இருப்பார். இயல்பான நிலையில் ஒருவருக்கு மரணம் என்பது ஏழு நிலைகளில் ஏற்படும்.

1. இயற்கையாக சம்பவிக்கும் மரணம்.
2. கொலையால் சம்பவிக்கும் துர் மரணம்
3. தற்கொலையால் நிகழும் மரணம்
4. விபத்தில் ஏற்படும் மரணம்
5. கூட்டு மரணம்(mass death)
6. அரசு தண்டனையால் மரணம்
7. மருத்துவ சிகிச்சையில் மரணம்

என ஒருவருக்கு மரணம் சம்பவிக்கும். சில குடும்பங்களில் சிலர் மறைவுக்கு பிறகு ஏற்றம் வருவதும் சில குடும்பங்களில் சீற்றம் வருவதும் அவரவர் அனுபவத்தில் அறிந்து கொள்ளலாம்.

இப்போ சொல்ல வருவது இது தான். இந்த இறப்பு சடங்குகளை எளிதாக எடுத்துக் கொள்ள முடியாது அல்லது கூடாது.

பிறப்புக்கு ஜாதகம் பார்ப்பது போல இறப்பிற்கும் புண்ணிய சக்கரம் போட்டு பார்ப்பது தான் வழக்க முறை. ஆனால் இன்றைய நாளில் எத்தனை பேர் இதனை செய்து இருப்பார்கள் என்று நினைக்கிறீர்கள்.

இன்னமும் சொல்வது என்றால், ஒரு சில குறிப்பிட்ட நட்சத்திரத்தில் இறப்பது ஆகாது அதை தனிஷ்டை என்று சொல்லுவார்கள். அதற்கு குறிப்பிட்ட இத்தனை நாட்கள் அடைப்பு செய்ய வேண்டும் என சொல்லுவார்கள். அது சரி இது எத்தனை பேருக்கு தெரிந்து இருக்கும் அல்லது எத்தனை பேர் இதை செய்து இருப்பார்கள் அல்லது அதற்குரிய பரிகார முறைகளை செய்து இருப்பார்கள் என்று நினைக்கிறீர்கள்.

சில சிந்தனைகளை சொல்கிறேன். குறித்துக் கொள்ளுங்கள். தனிஷ்டை என்பது அவிட்ட நட்சத்திரத்தில் தொடங்கி அடுத்த ஐந்து நட்சத்திரங்களில் மரணம் சம்பவித்தால், இந்த அடைப்பு அல்லது தனிமை முறையை கை கொள்ள வேண்டும்.

பிற மதங்களில் தீர்ப்பு நாள் என்று ஒன்று வரும். அதுவரை இறந்த உயிர்கள் கல்லறையிலேயே இருக்கும். அந்த தீர்ப்பு நாளில் நல்லதொரு தீர்ப்பை இறைவன் வழங்குவான் என்பது போல சொல்லி இருப்பார்கள். அது சரியா தவறா என்று சொல்வது நமது நோக்கமில்லை.

ஆனால் இந்து மதத்தில் அப்படி இல்லை. இறந்த உயிருக்கு உடல் கிடைத்த அடுத்த வினாடியே பிறந்து விடும் என்பது போல சொல்லி இருப்பார்கள். அதில் தான் இந்த தனிஷ்டா பஞ்சமி முக்கியத்துவம் பெறுகிறது. அவிட்ட நட்சத்திரத்தை முதலாகக் கொண்டு, சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி ஆகிய ஐந்தும் தான், பஞ்சாங்கத்தில் குறிப்பிடப் பட்டுள்ள தனிஷ்டா பஞ்சமிக்கான நட்சத்திரங்கள் ஆகும். அந்த சோதிட பாடலை உங்களுக்கு தருகிறேன். இது எளிய பாடல் தான் விளக்கம் தனியாக தர தேவையில்லை என விட்டு விடுகிறேன்.

*இயல்பான அவிட்டமோடு சதையம் பின்னும்*
*சிறந்த உத்திரட்டாதி பூரட்டாதி*
*செப்பிடும் ரேவதியோடு ஐந்து நாளது*
*திறந்து சொல்வேன் தனிஷ்டா பஞ்சமியே யாகும்*
*சீரில்லாத இன்னாளில் இறப்பாராகில்*
*பிறந்த வோரைந்து நட்சத்திரத்திற்கும்*
*பெலமாக வீட்டை அடைக்க நாளைக் கேளே!*

இதில் ஒவ்வொரு நட்சத்திரத்திற்கும் அடைக்க வேண்டிய நாட்களையும் வழிமுறைகளும் உண்டு. இதே போல வேறு எட்டு நட்சத்திரமும் உண்டு என்றாலும் இந்த ஐந்து நட்சத்திரத்தில் ஏற்படும் மரணத்திற்கு முறையான செயல்பாடுகளை செய்யவில்லை என்றால் அந்த குடும்பத்தில் வரக்கூடிய சிக்கல்களை தனியாக இன்னொரு பதிவில் சிந்திப்போம்.

இதே போல இறந்த உயிர்கள் அடையும் கதியை அறிய புண்ணிய சக்கரம் போட்டு பார்த்து பலன் அறிதலும், குறைந்த பட்சம் பிரச்சனம் போட்டு பார்த்து பலன் அறிவதும் அவசியம். ஆனால் நம்மவர்கள், இருந்தவர் தான் போய் விட்டாரே, அவர் எப்படி போனால் என்ன என, அவருடைய சொத்துக்களை எப்படி மாற்றிக் கொள்வது அல்லது அதை என்ன செய்வது என யோசிக்கிறார்களே தவிர, இருப்பவர்களுக்கு காட்டும் அக்கறை இறந்த பிறகு அந்த உயிர்களுக்கு காட்டுவதில்லை என்பது தான் வருத்தமான விஷயம். இதனால் வரும் நிம்மதி இழப்பு, தொடர் அல்லது திடீர் மரணம், அபிச்சார தோஷங்கள், ஆவி பிடித்தல் என சொல்லனா துயரங்கள் அல்லது தொழில் அல்லது பொருள் சார்ந்த கஷ்டங்கள் வரும் போது, சோதிடர்களை சந்தித்து, பரிகாரம் பிராயச்சித்தம் என தேடுகிறார்கள். அது பற்றிய சிந்தனைகளை இன்னொரு வாய்ப்பில் சிந்திக்க வைத்துக் கொள்வோம்.

இறப்புக்கு பின் என்ற இந்த அடிப்படை செய்திகளை மனதில் வாங்கிக் கொண்டு நாம் நலமாக வாழ வாழ்ந்தவர்களையும்

நன்றியுடன் வாழ வைப்போம் என சிந்தித்தால் வளமான வாழ்க்கை நிம்மதியாக அமையும்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 57 -

காதலர் தினம் பிப்ரவரி 14 என்று இன்றைய நாளில் எந்த பிள்ளைகளும் சொல்லி விடும். காதல் என்றால் என்ன? காதலர் என்பவர்கள் யார் என்று தெரியாதவர்கள் கூட இதை தெரிந்தோ தெரியாமலோ சொல்லி விடுவார்கள். காதலர் தின பார்ட்டி, கடைகளில் தள்ளுபடி பரிசு மழை தொலைக்காட்சி சிறப்பு நிகழ்ச்சி என ஒரு கொண்டாட்டமே நடக்கும்.

காதலர் தினத்திற்கு மட்டுமல்ல. மாரச் மாதம் 8ம் தேதி வரும் மகளிர் தினம்,யோகா தினம், எழுத்தறிவு தினம், வனவிலங்கு தினம் நீர் தினம் அன்னையர் தினம், அப்பா தினம், நண்பர்கள் தினம், முதியோர் தினம் என ஆண்டுக்கு ஒரு நாள் அவர்களின் சிறப்பை சொல்லி கொண்டாடும் விதமாக அமைந்து இருப்பது நமக்கு தெரிந்து இருக்கும்.

அதெல்லாம் சரிங்க ஐயா, இது போல சோதிடர் தினம் என ஒன்று உள்ளதா என்று உங்களுக்கு யோசிக்க தோன்றும். அதை சொல்வதற்கு தான் இந்த வார சிந்தனை.

பாரம்பரிய சோதிடம், பிருகு ஜோதிடம், நந்தி ஜோதிடம், சார சோதிடம், கைரேகை சோதிடம், எண் கணித சோதிடம், லால் கிதாப் என கிளி முயல் மைனா என எத்தனையோ சோதிட முறைகளை சொல்கிறார்களே. இவை எல்லாம் உண்மையா அல்லது சரியானது தானா.. பிழைப்பு கருதி இப்படி செய்கிறார்களா என்று சிலருக்கு ஐயம் வருவது இயல்பு தான்.

கொஞ்சம் சிந்தித்து பாருங்கள், பாரம்பரியமாக இருந்து தேயாமல் வளர்ந்து வரும் சித்த மருத்துவம், ஆயுர் வேத மருத்துவம், மாற்று மருத்துவமான அலோபதி மருத்துவம், யுனானி மருத்துவம் அக்கு பிரஷர் மருத்துவம், நேச்சரோபதி, யோக மருத்துவம் ப்ராணிக் ஹீலிங் இன்னும் பிற என பல மருத்துவ முறைகள் இருக்கின்றனவே

பிழைப்பு கருதி இருக்கிறதா என்று உங்களுக்குள் கேட்டு பார்த்தால் சோதிடம் பற்றிய உங்கள் ஐயம் நீங்கும்.

எந்த துறையை சேர்ந்தவர்களும் சோதிடர்களை கண்டால் ஒரு கணம் மனதில் வணங்கி விட்டு தான் செல்வார்கள். வெளிப்படையாக இதனை செய்யாவிடினும், மனதிற்குள் செய்வார்கள் இது தான் உண்மை.

சரி இந்த சோதிட தினம் பற்றி சொல்லுங்க என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது. சோதிடத்தின் தொடக்கம் பல நூற்றாண்டுகளின் ஆழத்திற்கு செல்கிறது, எனினும் கால சூழலுக்கு ஏற்ப அவை மாற்றமும் பெற்று வருகிறது என்பதை மறுக்க முடியாது.

வாழ்க்கையில் ஒவ்வொரு அம்சத்திலும் சோதிடம் இருக்கிறது என வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் எடுத்து சொல்கிறது பால சோதிட வார இதழ். இன்று, ஜோதிடம் இல்லாமல் எந்த ஒரு நபரும் தங்கள் வாழ்க்கையை கற்பனை கூட செய்து பார்க்க முடியாது. யாரோ ஒருவர் ஜாதகத்தை நம்புகிறார், யாரோ தொழில் ரீதியாக ராசி அறிகுறிகளுக்கு ஜோதிட கணிப்புகளைச் செய்கிறார்கள், என ஒவ்வொருவரும் ஒரு வகையில் ஜோதிடத்தை பின் தொடர்ந்து இருக்கிறார்கள்.

எங்கோ இருக்கும் ஒரு கிரகம் நம்மை எப்படி பாதிக்கும் என்று சில கருப்பு சட்டைகாரர்கள் கேட்கிறார்கள். காலில் வலி என்றால் வாயில் மாத்திரை போடுகிறோம். காலுக்கும் வாய்க்கும் நான்கு அடி தூரம் இருக்கிறதே என்று யோசித்து பார்ப்பதில்லை. அறிவியலார் சொன்னால் நம்புகிறார்கள். சோதிடர்கள் சொன்னால் கேள்வி கேட்கிறார்கள். புயல் வெள்ளம் வரும் என வானிலை அறிக்கை சொல்வதை நம்புகிறார்கள். இதை சோதிடர்கள் முன் கூட்டியே கணித்து பஞ்சாங்க பலனாக சொன்னால் அதை ஏற்க தயங்குகிறார்கள். என்ற இந்த நிலை மாற ஒவ்வொருவரும் ஜோதிட தினத்தை கொண்டாட

உலக ஜோதிட தினம் மார்ச் மாதத்தில் கொண்டாடப்படுகிறது இந்த ஆண்டு மார்ச் மாதம் 20 ம் தேதி கொண்டாடபடுகிறது. குறிப்பாக சொல்ல வேண்டும் என்றால் வசந்த உத்தராயனத்தில் கொண்டாட படுகிறது. புரட்டாசி மாதம் வரும் நவராத்திரி போல வசந்த நவராத்திரி என கோடையில் கொண்டாடும் பழக்கம் இந்து சமுதாயத்தில் உண்டு என்பதை பலரும் அறிந்து இருப்பார்கள். அது பற்றி இன்னொரு சந்தர்ப்பத்தில் சிந்திப்போம். இந்த நாட்களில் பகல் மற்றும் இரவு பொழுது ஒரு கால அளவை கொண்டு இருக்கும்.

இந்த நாட்கள் ஜாதகத்தின் புதிய சுழற்சியின் தொடக்கத்தை குறித்து காட்டுகிறது. அதாவது ராசி வட்டம் மார்ச் மாதத்தில் முதல் அடையாளம் மேஷம் சூரியன் அசுபதி நட்சத்திரத்தில் நுழையும் காலத்தை உலக சோதிட தினமாக கொண்டாட படுகிறது என்பதை அறிவார்ந்த சமூகம் ஏற்றுக் கொள்ளும். இது ஒரு சில நாட்கள் முன் அல்லது பின் வரலாம் என்பதால் பொதுவாக ஒவ்வொரு வருடமும் மார்ச் மாதம் 20ம் தேதி உலக சோதிட தினமாக கொண்டாட படுகிறது.

மனம் வருந்தி நிற்கும் ஒருவரை ஆற்றுப்படுத்தி, நல் ஆலோசனை சொல்லும் இந்த சோதிட கலை, தொழில் அதிபர்கள், அரசியல் பிரமுகர்கள், மட்டுமல்ல ஒவ்வொரு சாதாரண குடி மகனுக்கும் ஒரு ஊன்றுகோல் என்றால் மிகையில்லை.

சரி இந்த சோதிட தினத்தை எப்படி கொண்டாடுவது என்று உங்களுக்கு யோசனை வரலாம். சில கருத்துக்களை சொல்கிறோம். உங்களுக்கு ஏற்புடையதாக இருந்தால் அதை செயல்படுத்துங்கள்.

சிலர் தொழில் முறை சோதிடராக இருக்கலாம், சிலர் ஆர்வத்தின் அடிப்படையில் சோதிடம் பயின்று சொல்பவராக இருக்கலாம். யாராக இருந்தாலும், உங்களுக்கு இந்த கலையை கற்றுக் கொடுத்த ஆசானை சந்தித்து வாழ்த்து பெறுங்கள்.. அவர் நினைவில் வாழ்ந்து கொண்டு இருந்தால், அவர் நினைவாக சில மணி துளிகள் தியானம் செய்யுங்கள்.

நீங்களே சொந்தமாக புத்தகத்தை பார்த்து சோதிடம் படித்தவர்கள் என்றால், நீங்கள் விரும்பி படித்த சோதிட நூல்களை வைத்து வணங்கி வழிபடுங்கள். டிசபெரேல்லோ, சீரோ, என்ற எந்த நாட்டு சோதிட அறிஞராக இருந்தாலும் அவர் தம் புத்தகங்களை வைத்து வழிபடலாம்.

இந்த ஒரு நாள் மட்டுமாவது ஒரு சில மணி நேரத்திற்கு கட்டணமில்லாமல் சோதிட ஆலோசனை சொல்லுங்கள். (முன் பதிவு பெறுதல், நேர மேலாண்மை குறைந்த பட்ச கேள்விகள் என உங்களை சுய மேலாண்மை செய்து கொள்வது உங்கள் பொறுப்பு)

சோதிட ஆசிரியராக இருந்தால் மாணவர்களுக்கு ஒரு தேர்வு நடத்துங்கள். ஒரு நிகழ்ச்சி போல நடத்துங்கள். மாணவர்களுக்கு ஆளுமை திறனை வளப்படுத்த ஊக்குவியுங்கள்.

நாங்கள் சோதிடர்கள் இல்லை ஆர்வலர்கள் தான் என்றால், உங்களுக்கு நம்பிக்கைக்குரிய சோதிடரை சந்தித்து வாழ்த்து பெறுங்கள். குறிப்பாக இந்த ஆண்டு பெண் சோதிடர்களுக்கு வண்ணத்து பூச்சி படம் அல்லது பொருள் என பரிசு கொடுங்கள் அடுத்த சில ஆண்டுகளில் வரக் கூடிய உணவு பிரச்சனைகளுக்கு இது பரிகாரமாக இருக்கும். அப்படி யாரும் இதுவரை இல்லை என்றால் பால சோதிட இதழுக்கு வாழ்த்து சொல்லி ஒரு மின்னஞ்சல் அல்லது மெசேஜ் அனுப்புங்கள்.

ஒவ்வொரு சோதிடரும் தமது அனுபவம், பயிற்சி, மற்றும் உள்ளுணர்வுகளின் வெளிப்பாடு இவைகளை சேர்த்து ஆலோசனை சொல்லும் உளவியலாளர். முடிவெடுக்க துணை நிற்கும் வழிகாட்டி. நன்மையையும் தீமையும் கலந்தது தான் வாழ்க்கை, என்பதை எடுத்து சொல்லி பக்குவபடுத்தும் நல் மேய்ப்பர். சோதிட விதிகளை எடுத்து சொல்லி, அவரவர் தம் விதிப்பயன், கர்ம வினைகளை சுட்டி காட்டி பிரச்சனைகளை எதிர்கொள்ள ஊக்கு விக்கும் motivator. எந்த வித நிபந்தனையும் இன்றி உங்களுக்கு உதவும் ஆலோசகர் பணத்தை வாங்கி கொண்டு தானே பலன் சொல்கிறார் என்று வாதம் செய்யாமல்,

முன்னேற்றத்திற்கு என்பதை புரிந்து கொண்டு, வாழ்த்துங்கள், நலமாக வாழ அவர்கள் வாழ்த்துவார்கள்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 58 -

சூரியன் காலையில் உதிப்பது கிழக்கு திசையில் என பள்ளியில் பாடம் படித்து இருப்போம். வளர்ந்த பிறகு இதனை நேரில் பார்த்து அனுபவத்திருப்போம்.

அட ஆமாங்க.. அதுக்கும் சோதிடத்திற்கும் என்ன என கேட்க போறீங்க..அதை சொல்வதற்கு தான் இந்த வார பதிவு.

கிழக்கே தொடங்கி, வலமாக வலம் வந்தால் தெற்கு அப்புறம் மேற்கு அதை தொடர்ந்து வடக்கு என கிழக்கில் முடித்தால் ஒரு பிரதட்சணம் அல்லது வலம் வருதல் என வரும். இதை தான் கோவிலில் சுற்றுவதும் சிலர் நவ கிரகங்களை சுற்றுவதுமாக இருக்கும்.

சில சமூகத்தில், நித்தய அனுஷ்டானம் செய்யும் போது, இதனை வழக்கத்தில் வைத்து இருப்பார்கள்.

"*யானி கானி ச பாபானி, ஜன்மாந்தர-க்ருதானிச,*

*தானி தானி விநச்யந்தி, பிரதக்ஷிண பதே பதே*"

என மந்தரம் சொல்லி வலம் வருதல் இன்னமும் சில சமூகத்தில் பழக்கத்தில் இருக்கிறது.

கிழக்கில் தொடங்கி தெற்கு வழியாக கிழக்கில் முடிப்பது ஒரு சுற்று என வைத்துக் கொண்டால், இந்த ஜாதக கட்டத்தில் மேஷத்தில் தொடங்கி மீனத்தில் முடியும் ராசிக்குரிய திசைகளை தெரிந்து கொள்வோமா?

மேஷத்தை கிழக்கில் இருந்து கணக்கிட்டால், மீண்டும் சிம்மம் கிழக்கில் வரும், பிறகு தனுசுவும் கிழக்கில் வரும் இதை தான் 1-5-9 என திரிகோணம் என சொல்லுவார்கள். ஆக ஒரே திசையில் அமையும் ராசிகளை கோணமாக சொல்வார்கள் என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

இதை வேறு விதமாக வைத்து சிந்திக்க எடுத்துக் கொண்டால், நான்கு கோணம் சேர்ந்தது ஒரு சதுரம் இங்கே 1-5-9, 2-6-10, 3-7-11,4-8-12

என நான்கு கோணத்தை முறையே அறம், பொருள், இன்பம், வீடு என வகைப்படுத்திக் கொள்ளலாம்.

கால புருஷ தத்துவப்படி மேஷம் சிம்மம் தனுசு கிழக்கு திசையிலும், ரிஷபம் கன்னி, மகரம் தெற்கு திசையிலும், மிதுனம், துலாம், கும்பம் மேற்கு திசையிலும், கடகம், விருச்சிகம் மீனம் வடக்கு திசையிலும் அமையும்.

பூமி உருண்டையா? தட்டையானதா? என்ற வாதத்திற்குக் போகாமல், பூமி உருண்டையாக இருந்தால் நாம் ஏன் வீடுகளை சதுரமாக/செவ்வகமாக கட்டுகிறோம் என்று என வாதம் செய்யாமல், இதை அப்படியே வீட்டிற்கு பொருத்தி பார்த்தால் கோணமும் கேந்திரமும் கிடைக்கும்

இந்த அமைப்பில் ஒரு திசையில் இருந்து இன்னொரு திசைக்கு போகும் போது, இரண்டிற்கும் இடைப்பட்ட திசை வருமே உதாரணமாக தென்கிழக்கு, வடமேற்கு என அதை வைத்து சிந்தித்து பார்த்தால் நமக்கு புதிய சிந்தனை கிடைக்கும்.

கிழக்கு திசைக்குரிய ராசி மேஷத்தில் இருந்து தெற்கு திசையை தொடும் ராசி கடகம் தெற்கில் அதில் இருந்து மேற்கு திசையை தொடும் ராசி துலாம் அங்கிருந்து வடக்கு திசையை தொடும் ராசி மகரம்(1-4-7-10). இதை தான் கேந்திர ஸ்தானங்கள் என்று சோதிடத்தில் சொல்கிறோம்.

இந்த அமைப்பிலே தான் வாழும் வீடானது வாஸ்துவிற்குள் வைத்து சிந்திக்க தந்து இருக்கிறார்கள். diagnal என்று சொல்லக் கூடிய இரண்டு மூலைகளை குறித்துக்கொண்டு ஒரு வீட்டையே வலம் வந்து விடலாம்.

மனையின் அமைப்பு, வாசல் வைக்கும் திசை, சன்னல் அமைக்கும் முறை, வாசக்கால் மற்றும் சன்னலின் அளவுகள் அதன் டிசைன்கள், இதன் உட்புற சுவரின் பெயின்ட் நிறம் வெளிப்புற சுவரின்

நிறம், wash basin நிறம் குழாயின் அமைப்பு என ஒரு பெரிய பட்டியலே போகும்.

வீட்டை கட்டிப் பார்; கல்யாணம் பண்ணி பார் என்று சொல்லுவார்கள். அந்த வரிசையில் வாஸ்து சாஸ்திரத்தை தொட்டுப்பார் என்று சொல்ல வேண்டும். அதனால் தான் வாஸ்து விற்பனர்கள் கட்டணங்களை சில லட்சங்களை வாங்குகிறார்கள் என்பதை மனம் உவந்து ஏற்றுக் கொள்ள வேண்டும்.

இதே சிந்தனையை திருக்குறளில் வைத்து சிந்தித்தால், ஆச்சரியமாக இருக்கும். திருக்குறள் இந்த வாஸ்து கட்டமைப்பில் தான் அமைந்து இருக்கிறது. முதலில் வரும் பாயிரவியலில் நான்கு அதிகாரங்கள் உண்டு. இதில் முதல் அதிகாரம் கடவுள் வாழ்த்து கிழக்கு திசையையும், அடுத்து வரும் வான் சிறப்பு மேற்கு திசைக்குரிய அதி தெய்வமான மழை தரக்கூடிய வருணனையும், அதை அடுத்து வரும் நீத்தார் பெருமை, தென் திசையை குறிக்கும் கடவுளையும், அறன் வலியுறுத்தல் வடக்கு திசைக்குரிய அதி தெய்வமான குபேர கடவுளையும் குறித்து அமைந்துள்ளது என்றால் வியப்பாக உள்ளது அல்லவா.

சரி. இந்த வாஸ்து சாஸ்திரத்தை இந்த வாரம் சிந்திக்க எடுத்துக் கொள்வோம்.

தென் கிழக்கு திசையில் தான் சமையல் அறை இருக்க வேண்டும் என வாஸ்து சாஸ்திரம் சொல்லும். ஏன் என்றால், கிழக்கு பகுதி சூடாக இருப்பதையும், தென் பகுதியில் இருந்து வீசும் காற்று, இதமாக இருக்கும் எனபதாலும் இந்த பகுதியில் அடுப்பு அமைந்தால் மிதமான வெப்பத்தில் ஆரோக்கியமான உணவு கிடைக்கும் என்பதால் என்றால் பகுத்தறிவாதிகள் கூட வாஸ்து சாஸ்திரத்தை மறுப்பு சொல்லாமல் ஏற்றுக் கொள்வார்கள் இல்லையா.

இப்போ எங்கே சார் விறகு அடுப்பு வைத்து சமையல்

சோலார் அடுப்பு என மாறிக்கிட்டே இருக்காங்க என்று சொல்றீங்க புரிகிறது. அதற்கான சோதிட சிந்தனைகளை இன்னொரு வாய்ப்பில் சிந்திக்க வைத்துக் கொள்வோம்.

இந்த அக்னி மூலைக்கு, நேர் எதிர்புறம் வட மேற்கில் தான் கழிவறை வர வேண்டும் என சொல்லுவார்கள். இதனை வாயு மூலை என சொல்லுவாங்க. இப்படி diagnal ஆக இருந்தால் plumbing செலவு எங்கோ போயிடுமே என்று யோசிக்காதீர்கள் அதன் வழி முறைகளை குடும்ப தலைவரின் ஜாதக படி ஆய்ந்து சொல்வது தான் அனுபவம் வாய்ந்த விற்பனர்களின் ஆசிகள்.

இதே போல அலுவலகத்திற்கும் வாஸ்து முறை கொள்கைகள் உண்டு. விவசாய பண்ணை நிலத்திற்கும் சில முறைகள் உண்டு. இது ஒரு பெரிய கடல், அதனை தனியாக சொல்ல ஒரு தனி தொடரே தொடங்க வேண்டும் அதை சோதிடத்துடன் சேர்த்து சொல்லும் போது இன்னும் சுவையாக இருக்கும்.

வட கிழக்கு பகுதியினை ஈசான மூலை என்று சொல்லுவார்கள். இது அதிக பாரம் இல்லாமலும் இறையருள் பெறுவதற்கும் வைத்துக் கொள்ள வேண்டும் என சொல்லுவார்கள்.

இதன் எதிர் திசை தென்மேற்கு இது அதிக பாரம் உடையதாகவும் water tank- தண்ணீர் தொட்டி அமைக்க வேண்டும் என்றும் சொல்லுவார்கள். இப்படி நான்கு மூலைகளையும் எட்டு திசைகளையும் வடிவமைத்து தருவதில், ஒரு architect செய்யும் வரைபடத்தை போல சோதிட சிந்தனைகளை வைத்து வாஸ்து வடிவமைப்பு செய்வதும் மிகவும் அவசியமானது என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

ஐயா நங்கள் வாடகை வீட்டில் இருக்கிறோமே நாங்களும் வாஸ்து பார்க்க வேண்டுமா என்று உங்களுக்கு கேட்க தோன்றுகிறதா? நூறு சதவீதம் பார்க்க தேவையில்லை என்றாலும் சில குறிப்பிட்ட விஷயங்களை அவசியம் பார்த்து தான் ஆக வேண்டும் அதனால் தான்

அப்படி பார்கவில்லை என்றால், அதற்குரிய பலன்களை ஏற்றுக் கொள்ள தயாராக வேண்டும். அல்லது தெரியாமல் இந்த வீட்டுக்கு வந்து விட்டோம் என்று வேறு வீட்டுக்கு காலி செய்து கொண்டு போக வேண்டும்.

உதாரணமாக சொல்ல வேண்டு என்றால், லக்கினத்திற்கு இரண்டாம் வீட்டில் சர்ப்ப கிரகங்கள் இருந்தால் ஒரு சந்து போல நீளமாக போன பிறகு அவர்கள் வீட்டு நுழைவாயில் இருக்கும். இது அடுக்கு மாடி, வாடகை அல்லது சொந்த வீடு என எப்படி இருந்தாலும் இப்படி தான் இருக்கும். உங்கள் அனுபவத்தில் அல்லது உங்கள் ஜாத்தகத்தில் வைத்து சிந்தித்து பாருங்கள்.

இது போல ஜாதக அமைப்பை வைத்துக் கொண்டு வாஸ்து குறிப்புகளை சேர்த்துக் கொண்டு, பலம் பொருந்திய கிரகம் நலம் தரும் கிரகம் என நேர் செய்து ஆலோசனை சொல்வதால் தான் வாஸ்து ஆலோசனைக்கு சில லட்சங்கள் அவர்கள் உழைப்புக்கு கட்டணமாக வாங்குகிறார்கள் என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

தெரியாமல் வீட்டை கட்டி அல்லது வாங்கி விட்டோம். வீட்டை இடிக்கனுமா அல்லது விற்கணுமா என்று கேட்காதீர்கள். அதற்கான வழி முறைகள் உங்கள் ஜாதகத்தில் இருக்கும் அதை வைத்துக் கொண்டு சரி செய்ய வாய்ப்புகளும் உண்டு..

எங்கே பிரச்சனைகள் இருக்கிறதோ அங்கே தீர்வும் இருக்கிறது என்பதை புரிந்து கொள்ளுங்கள். பூட்டு தயாரிக்கும் போதே சாவியும் சேர்த்தே தான் தயார் செய்வார்கள். அனுபவம் இல்லாத சிலர் தான், பூட்டுக்குரிய சாவியை விட்டு விட்டு வேறு சாவியை வைத்துக் கொண்டு பூட்டு திறக்கவில்லை என அழுது கொண்டு இருப்பார்கள்.

“தட்டுங்கள் திறக்கப்படும்” என்றால் பூட்டிய கதவை தட்டினால் அது திறக்கப்படுமா? என சிந்தித்து பார்த்தால் சொல்ல வருவது உங்களுக்கு புரியும்.

நல்லதே நினைப்போம் நல்லதே நடக்கும்

# - 59 -

காலையில்....

ஏய்... டைம் ஆயிடுச்சு.. அந்த சானலை திருப்பு.. ராசி பலன் முடிந்து விட போகிறது... என சொல்லிக் கொண்டே.. ஆவலுடன் கதவை பிடித்துக் கொண்டு நிற்கும் பலரை எனக்கு தெரியும்.

அட போங்க ஐயா... நானும் அப்படித்தான் என்று வெட்க பட்டுக் கொண்டு நீங்கள் சொல்வது புரிகிறது.

இது குறித்து இந்த வாரம் சிந்திக்கலாம் என்று தான் சில பொட்டலங்களை கொண்டு வந்து இருக்கிறேன்.

ராசி பலன் என்பது அன்றைய கோச்சார ஜாதகத்தை வைத்து பலன் சொல்லுவது தான் என்பது பலருக்கும் தெரிந்து இருக்கும். இது சரியா தவறா என்று சொல்லி மற்றவர்களை சங்கட படுத்துவது நமது நோக்கமில்லை.

என்னவோ சார் .... இது சரியா தவறா என்பது எங்களுக்கு தெரியாது. ஆனாலும் “ராசி பலன் கேட்டால் தான் எங்களுக்கு ஒரு லோட்டா காபி குடித்த மாதிரி” என்று சொல்லும் அபிமானிகளும் இருக்கத்தான் செய்கிறார்கள். இதில் ராசி பலனை விடுங்க.. “இந்த சந்திராஷ்டமம் என்று ஒன்று இருக்கே...அதுவும் இந்த ராசிக்கு இன்னிக்கு சந்திராஷ்டமம் என்று சொல்லுவாங்க பாருங்க....” என்று சொல்ல வரும் உங்கள் எண்ணம் புரிகிறது அதை குறித்து இந்த வாரம் சிந்திப்போம்.

சந்திராஷ்டமம் என்பது ஒருவர் பிறந்த ராசிக்கு சந்திரன் எட்டாமிடமான அஷ்டமஸ்தானத்தை கடந்து செல்லும். இதையே சந்திராஷ்டமம் என்கிறோம். அஷ்டமத்திற்கு வருவது என்பதை புரிந்து கொண்டால் இது சுலபமாக புரியும்.

ஒருவரின் ஜாதகத்தில் லக்கினத்திற்கு அடுத்து ராசியை தான் சொல்லுவோம். ராசி என்பது சந்திரன் எந்த ராசியில் நிற்கிறதோ அந்த இடம் தான் என்பது பலருக்கும் தெரிந்து இருக்கும்.

சரி இந்த சந்திராஷ்டமம் வந்தால் என்ன ஆகும்..?மன குழப்பம் வரும் எதையும் முடிவு எடுக்க முடியாது. நல்ல காரியங்களை செய்ய கூடாது என்பது போல சொல்லி வைத்து இருப்பார்கள்.. ஆனால் உண்மையில் என்ன ஆகும் தெரியுமா? ஒன்றும் ஆகாது என்பது தான் வெளிப்படையான உண்மை. சந்திராஷ்டமம் என்றால் ஏதோ ஆகாதா தினம் போல அஞ்ச தேவையில்லை.

என்னங்க அய்யா.. நாங்க சந்திராஷ்டமம் பற்றி என்னமோ நினைத்துக் கொண்டு இருந்தோம்.. நீங்க “புஸூக்” என்று இப்படி சொல்லிட்டீங்க என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது.வெளிச்சத்திற்கு வர வேண்டும் என்பதற்காக தான் புதிய சிந்தனைகளை இயல்பான நடையில் உங்களுக்கு பால சோதிடம் தொகுத்து தந்து கொண்டு இருக்கிறது.

பயப்படக் கூடிய அளவில் சந்திராஷ்டமம் பாதிப்பு ஒன்றும் தராது என்ற எண்ணத்தை முதலில் பதித்துக் கொண்டு... சொல்லவருவதை இயல்பான போக்கில் சிந்தித்து பாருங்கள்.

ட்ராபிக் அதிகமாக இருக்க கூடிய சாலையில் பயணம் செய்தால் நமது வண்டியை எப்படி ஓட்டுவோம் என்பதை நினைத்து பாருங்கள். வண்டியை விட்டு இறங்கி போய் விடுவோமா அல்லது வீட்டிற்கு திரும்ப போய் விடுவோமா?

அவ்வளவு தான் சந்திராஷடமம்.. ட்ராபிக் அதிகமாக இருக்க கூடிய சாலையில் எப்போதுமே ட்ராபிக் இருக்காது சில மணி நேரத்தில் அது சரியான இயல்பு நிலைக்கு வந்து விடும். அல்லது பணியில் இருக்கும் காவலர்கள் அதனை சரி செய்து விடுவார்கள். ட்ராபிக் உதாரணமாக சொன்னதற்கு என்ன காரணம் தெரியுமா? பயணம்

அப்படின்னா சந்திராஷடமம் பற்றி பயப்பட தேவையில்லையா? அன்னிக்கு நல்ல காரியங்களை செய்யலாமா என்று கேட்க நினைக்கிறீர்கள். புரிகிறது.

நல்ல காரியங்களை செய்ய நாள் பார்க்க வேண்டுமா? ராகு காலத்தில் நல்ல காரியங்கள் செய்ய கூடாது. அஷ்டமி நவமியில் செய்ய கூடாது. சந்திராஷ்டமும் செய்ய கூடாது என்றால் எப்போ தான் செய்வது என பகுத்தறிவாளர்கள் என சொல்லிக் கொண்டு இருப்பவர்கள் கேட்பார்கள். அவர்களுக்கு இன்னொரு சந்தர்ப்பத்தில் பதில் மற்றும் விளக்கம் சொல்லலாம்.. இப்போ அவர்களை அந்த பக்கம் வைத்து விட்டு, சொல்ல வரும் விஷயத்தை புரிந்து கொள்ளுங்கள்.

எட்டாம் இடத்தில் இருந்து நேர் பார்வையாக அது தனம் வாக்கு குடும்பம் என இரண்டாம் வீட்டை பார்ப்பதால், அந்த ஸ்தான அமைப்புகள் பாதிக்கும் என நம்ப படுகிறது.

முக்கியமான விஷேஷ நாட்களில் மஹா சங்கல்பம் செய்வது உண்டு அதை நீங்களும் கவனித்து இருக்கலாம். அல்லது செய்து கூட இருக்கலாம். அது சமயம்,

‘தாரா பலம் சந்திர பலம் ததேவா,
வித்யா பலம் தெய்வ பலம் ததேவா’

-என்று மந்திரம் சொல்லி ஆரம்பிப்பார்கள். இதில் தாரா பலன் என்று சொல்றாங்களே .. சந்திர பலன் என்று சொல்றாங்களே.. என்பது தான் இந்த வாரம் நாம் எடுத்துக் கொள்ளும் சிந்தனை.

உதாரணமாக சொல்கிறேன். சரியாக உள்ளதா சொல்லுங்கள். உங்கள் ஜென்ம நட்சத்திரத்தில் இருந்து 17 வது நட்சத்திரம் அன்றைய நட்சத்திரமாக வந்தால், அன்று சந்திராஷ்டமம் இல்லையா..

சரி இப்போ தாரா பலனை எடுத்துக் கொள்வோம். சந்திரன் கோச்சார ரீதியாக பலனை தாரை மூலமாக வழங்குவதாக நம்ப படுகிறது என்பது உங்களுக்கு தெரிந்து இருக்கும். ஒருவருடைய ஜென்ம நட்சத்திரத்தில் இருந்து அன்றைய தினத்தின் நட்சத்திரம் வரை எண்ணி

வகுக்க வரும் மீதியை கொண்டும் தாரா பலன் சொல்ல படுகிறது என்பது உங்களுக்கு தெரிந்து இருக்கும். 1 முதல் 9 வரைக்கும் ஜென்ம தாரை மைத்திர தாரை, பரம மைத்திர தாரை என பலன் சொல்லுவார்கள்.

இப்போ பாருங்கள் எந்த நட்சத்திரத்திற்கு எந்த நாள் சந்திராஷ்டமமாக வருகிறதோ. அந்த நாளில் தாரா பலன் சிறப்பாக இருக்கும். அது மைத்திர தாரையாகவோ அல்லது பரம மைத்திர தாரையாகவோ இருக்கும்.

உதாரணமாக, ஜென்ம நட்சத்திரம் பூசம், பூச நட்சத்திரத்திற்கு சந்திராஷடம தினம் சதயம் நட்சத்திரத்தின் அன்று. இல்லையா.

இதே நாளில் தாரா பலன் பார்த்தால், மைத்ரா தாரை என்று வரும். இதன் பலன் புதிய முயற்சி மேற்கொள்ளுதல், புதிய செயல்கள் செய்தல் என்பது போல வரும்.

இப்போ சொல்லுங்க. தாரா பலன் நன்றாக இருக்கிறது என அந்த நாளை நல்ல நாளாக சொல்லலாமா அல்லது சந்திராஷ்டமம் என்று அந்த நாளில் நல்லது செய்யாமல் தவிர்க்கலாமா?

இந்த சிந்தனையில் சிந்தித்தால், சந்திராஷ்டமத்தினால் கெடுபலன்கள் வராது என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

சந்திரன் உச்ச நீச ஆட்சி வீட்டுக் காரர்களுக்கு சந்திராஷ்டம பாதிப்பு இருக்காது என்பதை புரிந்து கொள்ளுங்கள். ஜெனன ஜாதகத்தில் 6-12மிடத்தில் சந்திரன் இருந்தால் அவர்களுக்கு பாதிப்பு இருக்காது இதே போல குரு, சுக்கிரன் பார்வை எட்டாம் இடத்தில் பதிவது, சந்திராஷ்டமம் அடையும் நட்சத்திரங்கள் குரு அல்லது சுக்கிரன் நட்சத்திரமாக இருப்பது இவர்களுக்கு பாதிப்பு இருக்காது என சில பொது விதிகளும் உண்டு.

இதனால் தான் சந்திராஷ்டம தினத்தின் போது, அன்றைய நாளுக்குரிய உணவுகளை எடுத்துக் கொண்டால் சந்திராஷ்டமம் பற்றிய

சட்டைகள் கூட சோதிடத்தை ஏற்றுக் கொள்ளும் என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

சந்திராஷ்டம பயம் இன்றி, இனி, இறை நம்பிக்கையோடு, பயமின்றி ஒவ்வொரு நாளையும் எதிர்கொள்ளுங்கள்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 60 -

இந்த டிஜிட்டல் உலகில், முதுகில் சோலார் பேனல், காதில் ஹெட் போன், அந்த கையில் ஆன்ட்ராய்ட் போன், இந்த கையில் டேப்லேட், வாயில் ஆம்லெட், காலில் கொஞ்சம் இடம் இருக்கிறது அங்கே சின்னதா ஒரு சோலார் பேனல் வைத்த செருப்பு.. என நடக்க மக்கள் ரெடியாகி விட்டார்கள் ..

என்ன அப்படி பார்க்கிறீர்கள்.. இது என்ன கற்பனை என யோசிக்காதீர்கள்.. இந்த நாட்கள் கண்ணுக்கு எட்டிய தூரத்தில் தான் இருக்கிறது.

ஃபோன் செய்தால் போதும், வாயில் ஊட்டி விடும் டோமோட்டோ, வீடு தேடி வரும் தடுப்பூசி.. இப்படி நிறையா மாற்றங்கள் வந்தாலும் இன்னமும் மனிதன் வாயாலே தானே சாப்பிடுகிறார்கள்.. அது சரி.. உண்மையிலேயே சாப்பிடுகிறார்களா என்றால் இல்லை என்று தான் சொல்ல வேண்டும்.

காலையில் எங்கே சாப்பிட நேரம் இருக்கு என்று பிள்ளையை ஒரு பள்ளிக் கூடத்தில் தள்ளி விட்டு, கணவனும் மனைவியும் ஆபிசுக்குக் போற அவசரத்தில் அதை .. அதாங்க “சாப்பாட்டை” மறந்து மதிய உணவை வெந்தவரை போதும் மீதத்தை ஆபிசில் ஓவனில் சூடு படுத்திக் கொள்ளலாம் என எடுத்துக் கொண்டு போயிடறாங்க...

காலையில் உணவு, மிட் மார்னிங் உணவு, மதிய உணவு பின் மாலை உணவு என தொடர்ந்து இரவில் முடிய வேண்டும்.. ஒரு நாளைக்கு ஐந்து முறை உணவு உண்பதால் ஆரோக்கியமான உடல் நலம் கிடைக்கும். உடல் ஆரோக்கியமாக இருந்தால் நோய் எதிர்ப்பு சக்தி தானே உடலில் அமைந்து விடும்.. இது தான் தமிழர்கள் முறை. இதை மறந்தால், மீண்டும் கொரானா வருமா என்ற பயமும் வரும்.

இதையே இன்றைய மருத்துவர்கள், ஆரோக்கியமான வாழ்க்கைக்கு, உணவை ஐந்து முறையாக பிரித்து உண்ண வேண்டும் என்று சொல்றாங்க..

அதுவும் பாருங்க.. இந்த வகையில் தான் இந்த பயிரை சாகுபடி செய்ய வேண்டும் என்றும் எதை தவிர்க்க வேண்டும் என்று சொல்லி பழக்கியது தமிழர் மரபு. அதை இயற்க்கை நமக்காக அப்படி அமைத்து தந்து இருக்கிறது..

உதாரணமாக ஆச்சாரமான குடும்பங்களில், (ஆடி முதல் தொடங்கும்) சாதுர் மாதத்தில் கத்திரிக்காய் சாப்பிடுவதை தவிர்ப்பார்கள்.. இதையே இந்த கத்திரிக்காய் ஆடி பட்டத்திற்கு ஏற்றது அல்ல என்பதை விவசாய நண்பர்கள் சொல்லி தருவார்கள்..

அதிலும் அந்த கத்திரியில் பச்சை நீலம், வரி, வெள்ளை என எத்தனை வகை எதை எப்போ சாப்பிட வேண்டும் என்ற வழி முறையை சொல்ல தொடங்கினால், சொல்ல வந்த செய்தியை சொல்ல முடியாமல் போயிடும்.

அறுசுவை உணவுக்கும் கிரகங்களின் ஆளுமை உண்டு.. அதுவும் நமக்கு பிரியமான சாப்பாடு என்றால் கேட்கவா வேண்டும்.. இந்த பிரியமான சாப்பாட்டை நமக்கு அடையாளம் காட்டுவது ஜாதகத்தில் உள்ள ஆறாம் இடம் தான்..

அட.. ஆறில் இத்தனை இருக்கா என்று கேட்காதீர்கள்.. பாசனத்திற்கு பயன் படும் நீரை “ஆறு” என்று தான் சொல்லுவார்கள்.என்பதை சொல்லி தானா தெரிய வேண்டும் என சிந்தித்தால் சொல்ல வருவது புரியும்.

இப்போ பாருங்கள், ஆறாம் வீட்டில் சுக்கிரன் இருந்தால் பல வகையான உணவுகளை உட்கொள்வார். வெரைட்டி இருந்தால் தான் இவருக்கு சாப்பாடு இறங்கும்..

சனி இருந்தால், அவருக்கு போதுமான அளவு சாப்பாடும் கிடைக்காது, அல்லது கிடைத்த சாப்பாட்டில் சத்தும் இருக்காது.

இந்த ஆறாம் இடம் நீர் ராசிகளாக இருந்து விட்டால் அவர் மது பிரியராக இருப்பார் என்றால் ஆச்சரியமாக இருக்குதா, ராகு கூட இருந்தால் போதும் அவ்வளவு தான் தினமும் அவரை அந்த கடையில் பார்க்கலாம்..

செவ்வாய் இருந்தால், தேவைக்கு அதிகமாக உணவை சாப்பிட்டு விட்டு, மலைப் பாம்பாக நெளிவார்... இப்படியே சொல்லிக் கொண்டு போகலாம்.

உடல் ஆரோக்கியத்திற்கு சாப்பாடு இந்த ஆறாம் இடம் தான், மன ஆரோக்கியத்திற்கு கடன் இல்லாத வாழ்க்கை, அந்த கடன் பற்றி சொல்வதும் இந்த ஆறாம் இடம், அமைதியான வாழ்க்கைக்கு எதிரிகள் இல்லாத சூழல் தான் அதையும் இந்த ஆறாம் இடம் தான் குறிக்கிறது என்பது சோதிட குறிப்பு.

அதனால் அன்றாட வாழ்வில் சோதிடம் என்ற அடிப்படை சிந்தனையை புரிந்து கொண்டு நடந்து கொண்டால் நிம்மதியான வாழ்க்கையை எல்லோராலும் வாழ முடியும் என்பதை ஒவ்வொருவரும் புரிந்து கொள்வது அவசியம்.

முன்பெல்லாம், அய்யர் ஊஞ்சலில் உட்கார்ந்து கொண்டு இருப்பார், அவர் மனைவி “ஏன்னா.. இன்னிக்கு என்ன சமைக்கட்டும்?” என்று கேட்பார்.. அய்யர், பஞ்சாங்கத்தை பார்த்து திதி நட்சத்திரங்களை பார்த்து நீர் தன்மை உடைய, அல்லது வெட்ப தன்மை உடைய என அறுசுவையில் எந்த சுவை அன்றைய நாளுக்கு ஆரோக்கியத்திற்கு ஏற்றதோ, அதை சமைக்க சொல்லுவார்.. அவர்கள் எந்த தொற்று நோயும் இல்லாமல், ஆரோக்கியமாக தான் இருந்தார்கள்.

எந்த காய் மார்கெட்டில் விலை குறைவாக இருக்கிறதோ அவைகளை நிலம் நீர் நெருப்பு காற்று ஆகாயம் என்ற எந்த தன்மை உள்ள காயாக இருந்தாலும், அது எதிர்மறை விளைவுகளை தருவதாக இருந்தாலும் கூட, அதை சமைத்து போடுகிறார்கள்.. இது ஆரோக்கியமானது மட்டுமல்ல, அன்றைய நாளுக்கு எர்புடையாதகவும் இல்லை என்பதால் நோய் எதிர்ப்பு சக்தி குறைகிறது, நோய் தொற்று கூட எளிதாக பரவுகிறது என்று சொன்னால் வியப்பாக இருக்கிறது அல்லவா..

உடல் சக்தி பெற உதவும் உணவு தான் உடலில் சேரும் சாப்பாடு, அது கூழ் இரத்தம், தசை, கொழுப்பு, எலும்பு, மஜ்ஜை, விந்து மற்றும் கழிவு என ஏழு இடத்தில் வடிகட்டி உயிர் வாழ உதவுகிறது, என்பதை புரிந்து கொண்டு, அவரவரின் அன்றைய நாள் இருக்க வேண்டும்.

பசிக்காகவோ, ருசிக்காகவோ, எதையாவது சாப்பிட்டு எப்படியோ வாழ வேண்டுமா? நோய் இல்லாத வாழ்வே செல்வம் என்ற மன நிலையில், திருப்தியாக வாழ வேண்டுமா என்பதை நாம் தானே முடிவு செய்ய வேண்டும்.

அடிப்படை ஜோதிடம் தெரிந்து கொண்டு விட்டால் இன்றைய உணவு தயாரிப்புக்கு நாமே மெனு போட்டு விடலாம்... அப்புறம் என்ன நோய் தொற்றுக்கு சொல்லுங்கள் குட் பை...!!

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 61 -

“சார்.. நாங்க எல்லாம் வாழ்க்கையில் முன்னுக்கே வர முடியாதா? கர்ம வினை தான் கரணம் என்றால், அவ்வளவு கொடுமைக் காரனாகவா நான் இருந்து இருப்பேன். எனக்கும் வாழ்க்கையில்......” என்று சொல்லுபவர்களை நீங்கள் கவனித்தது உண்டா?

அட... ஆமாம்.. இப்போ தான் புரிகிறது. கார்ப்பெண்டர் மகன் கார்ப்பெண்டர், பணக்காரன் மகன் பணக்காரன் என இப்படி இருக்கிறார்களே.. என்று யோசிக்க தொடங்கி விட்டீர்கள். புரிகிறது.

இது விதியா... வாய்ப்பு இன்மையா... வாழ்க்கை சூழலா... என்ற பொதுநல விவாதத்திற்கு போகாமல் சோதிட ரீதியாக சிலவற்றை இந்த வாரம் சிந்திக்க வைத்துக் கொள்வோம்.

இது தான் படிப்பு. இது தான் தொழில். இது தான் வருமானம். என ஜாதகத்தை பார்த்து சொல்ல முடியும் என்றாலும், பேறு (நற்பேறு), இழவு(இழத்தல்), இன்பம், பிணி, மூப்பு, சாக்காடு(இறத்தல்) ஆகிய ஆறும் கருவினுள்ளே அமைந்தவை. என்பது சித்தாந்த சாத்திரங்களில் தலையான சாத்திரமான சிவஞான சித்தியார் கூற்றாகும்.

கருவினுள் அமைந்ததை தான் ஜாதகம் சொல்கிறது என்கிற போது, ஒரு ஜாதகத்தை பார்த்து இதனை சொல்லிவிட முடியாதா என்ன? எப்போது இவையெல்லாம் அமையும் அல்லது நடக்கும் என்பதை தான் சோதிடர்கள் ஆலோசனையாக தருகிறார்கள் என்பதை புரிந்துகொள்ளுங்கள். இதை தான் what is pre-written cannot be rewritten என்று இயல்பாக சொல்வார்கள். இதையும் மாற்றி அமைக்க முடியும் என்ற சிந்தனையை இன்னொரு வாய்ப்பில் சிந்திக்க வைத்துக் கொள்வோம்.

சில பொதுவான விதிகளை புரிந்து கொண்டுவிட்டால், இயல்பாக நம்மை நாமே அடையாளம் கண்டு கொள்ள முடியும் இல்லையா.

ஜாதகத்தில் ஒரு கட்டத்தில் “ல” என்று போட்டு இருக்கும். இது தான் லக்கினம் என்பது உங்களுக்கு தெரிந்து இருக்கும். எந்த ராசி கட்டத்தில் “ல” போட்டு இருக்கிறதோ, அந்த ராசி கட்டத்திற்கு உரிய அதிபதி யாரோ அவரே லக்கினாதிபதி என்பதும் உங்களுக்கு தெரிந்து இருக்கும். உதாரணமாக விருச்சிக ராசியில் “ல” போட்டு இருந்தால், அந்த ஜாதகருக்கு லக்கினாதிபதி விருச்சிக ராசிக்கு அதிபதியான செவ்வாய் என்பதை இயல்பாக புரிந்து கொள்ள முடியும் இல்லையா.

சரி.. இதே போல எந்த ராசி கட்டத்தில் சந்திரன் இருக்கிறதோ, அதுவே அந்த ஜாதகருக்கு ராசியாக அமையும். அந்த ராசிக்கு அதிபதியே ராசியாதிபதி. உதாரணமாக சிம்ம ராசியில் சந்திரன் இருந்தால், அந்த ஜாதகருக்கு ராசியாதிபதி சூரியன் என புரிந்து கொள்ள முடிகிறது அல்லவா.

இப்போ பாருங்கள், இந்த லக்னாதிபதியும் ராசியதிபதியும் நண்பர்களாக அமைந்தால், அந்த ஜாதகர் மகிழ்ச்சியாக இன்பமுடன், வாழ்க்கையில் இருப்பார்.

லக்னாதிபதி பலமாகவும், ராசியதிபதி பலம் இல்லாமலும் இருந்தால், வாழ்வில் முதல் பாதி “ஓகோ” என வாழ்ந்து பின் பாதி வாழ்வில் எல்லா துன்பங்களையும் சந்திப்பார். வாழ்ந்து கெட்ட மனிதர்கள் என்பது போல.

ராசியதிபதி பலமாகவும் லக்னாதிபதி பலமில்லாமலும், இருந்து விட்டால் முதல் பாதி வாழ்வில் கல்வி, பொருளாதாரம் வசதியான வாழ்க்கை என எதுவும் கிடைக்காது. தோல்வி மேல் தோல்வி தொட்டதெல்லாம் நஷ்டம் அவமானம் நண்பர்கள் இன்மை

எங்கே என தேடும் நிலை, பசி, பிறரை பார்த்து ஏங்கும் நிலை என இப்படி இருக்கும். பின் பகுதி வாழ்க்கையில், பணம், புகழ், சமூக அந்தஸ்து என வந்து கொட்டும் தர்ம சிந்தனை மேலோங்கும் வள்ளல் பட்டம் கூட வந்து சேரும்.

சரி, இருவரும் பலமாக நலமாக இருந்தால், அப்புறம் என்ன பிறப்பு முதல் இறப்பு வரை கஷ்டம் இல்லாத நிலைமை தான்.

ஒருவேளை லக்னாதிபதியும் சரி ராசியதிபதியும் சரி, நீசம் பெற்று இருந்தால் என கேட்க வருகிறீர்கள் புரிகிறது. அவசர படாதீர்கள் அந்த சிந்தனையை கொஞ்சம் அந்த பக்கம் வைத்து விடுங்கள். இப்படி இருவரும் நீசமாக இருந்தால், இவர்களுக்கு கடவுள் நினைத்தால் மட்டுமே வாழ்க்கை என்று ஒன்று இருக்கும். என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

பொதுவாக, லக்னாதிபதி நீசமான ஜாதகர் அதீத திறமைசாலியாக இருப்பர், வாழ்க்கையில் வரும் எல்லா பிரச்சினைகளையும் பணம் கொண்டு சமாளிக்கலாம் என தீர்மானமாக நம்புவர் ஆனால் பணம் இவர்களை நெருங்காமல் லக்னாதிபதி தடுத்து விடுவார் என்பது தான் இயல்பான உண்மை.

இவர்களுக்கு வாழ்க்கையில் எதிலும் ஒரு திருப்தி இருக்காது, வாழ்க்கையில் பிடிப்பு இருக்காது, பிடித்த படிப்பு இவர்களுக்கு அமையாது படிப்பிற்கேற்ற வேலை அமையாது, தகுதியும் திறமையும் இல்லாத ஒருவன் என்னை முந்திக் கொண்டு போகிறானே என கண்ணீர் விடுவர். இன்னும் சொல்ல போனால், இவர்கள் திறமைகள் இருந்தும், வேலை வெட்டி இல்லாமல் சுற்றும் நபர்கள் இவர்களாகவே இருப்பர்.

இன்றைய வளரும் தலைமுறைகள் பள்ளி படிப்பில் இறுதி ஆண்டை முடித்தவர்கள் அடுத்து என்ன படிக்க வேண்டும் என துடிப்பவர்கள், இவர்களை இப்படி தான் படிக்க வைக்க வேண்டும்

பெண் அல்லது பையன் அதை படிக்கிறார் என்பதற்காக தன பிள்ளைகளை படிக்க வைக்க நினைப்பவர்கள் என இன்றைய இயல்பான சூழலில், சில சோதிட அடிப்படைகளை தெரிந்து கொண்டு அவர்கள் வாழ்க்கையை "go with the flow" என அந்த ஓட்டத்தில் அமைத்தால், அவர்களுக்கும் நிம்மதி, ஜாதகருக்கும் சாதகமான சூழலை ஏற்படுத்தி தர முடியும் என்பதை நம்புங்கள்.

இது போல லக்கினாதிபதி, ராசியாதிபதி சாதகமான சூழலில் இல்லாத நிலையில், அவர்களுக்கான உணவு முறையை பழக்கத்திற்கு கொண்டு வருதல், சில ஒழுக்க முறைகளை பயிற்று வைத்தல் என குழந்தை வளர்ப்பிலேயே அமைத்து கொடுத்து விட்டால், இவர்கள் வாழ்க்கை பிரகாசமாக அமைந்து விடும்.

அதனால் தான் குழந்தை பிறந்த பிறகு ஜாதகம் எழுதி அதன் நிலையை புரிந்து கொண்டு அதன் படி பழக்க படுத்துவார்கள். ஆனால் இன்றைய பெற்றோர்கள் குழந்தை என ஒன்று வந்து விட்டது. ஜாதகம் எழுதுவது சடங்காக போய்விட்டது என ஒரு பக்கம் ஒதுக்கி வைத்து விட்டு, தான் விரும்புவதை பிள்ளைகள் மீது திணித்து இவர்களும் மகிழ்ச்சியாக இருப்பதிலை.. அவர்களையும் மகிழ்ச்சியாக இருக்க விடுவதில்லை என்ற நிலையை தான் நாம் பார்த்துக் கொண்டு இருக்கிறோம்.

உங்கள் நம்பிக்கைக்குரிய சோதிடரை அணுகி, தொடக்கத்தில் பழக்கம் ஏற்படுத்தி தந்தால், நல்லதாகவே அமையும் என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 62 -

“என்னைப் பார்.. யோகம் வரும்” என்று இரண்டு கழுதை படம் போட்டு ஒரு போட்டோவை சிலர் வீட்டின் வாசலில் தொங்க விட்டு இருப்பார்கள். இன்னும் சிலர் கண் திருஷ்டி விநாயகர் என ஒரு வித்தியாசமான விநாயகர் படத்தை வாசலில் தொங்க விட்டு இருப்பார்கள்.

இன்னும் சிலர் முகம் பார்க்கும் கண்ணாடி, கருப்பு கயிறு, சிவப்பு மிளகாய், எலுமிச்சை பழம், படிகாரம், குதிரை லாடம் என அவரவர்களுக்கு தெரிந்ததை தொங்க விட்டு இருப்பார்கள். இதில் வெகு சிலரே வெள்ளருக்கு குச்சியை கட்டி தொங்க விட்டு இருப்பார்கள். அது பற்றி இன்னொரு சந்தர்ப்பத்தில் விளக்கமாக சிந்திக்க வைத்துக் கொள்வோம்.

ஏன் என்று கேட்டால் “திருஷ்டி” என்று சொல்லுவார்கள். அதாவது மற்றவர்கள் இவர்களை பார்த்து அல்லது இவர்கள் வளர்ச்சியை பார்த்து பொறாமை படுவார்கள் என்று சொல்லுவார்கள். இது சரியா..? தவறா...? என்று சொல்லி அவர்கள் மனதை வருந்த செய்வது நமது நோக்கமில்லை.

அதெல்லாம் சரிங்க.. இதெல்லாம் உண்மையா? நம்ம ஜாதகத்தில் என்ன நடக்கணுமோ அது தானே நடக்கும். மற்றவர்கள் திருஷ்டி என்பதால் இதெல்லாம் நடக்குமா? இது என்ன மூட நம்பிக்கையா என்பது போல உங்களுக்கு எப்போதாவது தோன்றியது உண்டா?

என்னது அப்படின்னா இதெல்லாம் சும்மாவா என்று நீங்க கேட்க வருகிறீர்கள் புரிகிறது. அதை சொல்வதற்கு தான் இந்த வார சிந்தனை.

நமது சிந்தனையை தள்ளி அவைகள் செல்வாக்கு பெறும். அந்த எண்ண அலைகள் எதிர்மறையாக இருந்தால், அது நாம் உறுதியாக இல்லாத போது நம்மை பாதிக்கும். இதை தான் திருஷ்டி என்று சொல்றாங்க. நேர்மறையாக இருந்தாலும் பாதிக்கும். அதை நாம் உணர மாட்டோம் என்பது தான் உண்மை.

இது போல சிலவற்றை வாசலில் கட்டுவது சரியா தவறா என்பதை விட சோதிட ரீதியிலான பார்வையை இங்கே வைத்து சிந்தித்தால் நமக்கு சில விஷயங்கள் தெளிவாகும். அத்துடன் எதை எங்கே எப்படி வைக்க வேண்டும் என்பதையும் புரிந்து கொண்டால், நாம் என்ன செய்ய வேண்டும். எப்போது எதை எப்படி செய்ய வேண்டும் என்பதும் தெளிவாகும் இல்லையா.

திருஷ்டி என்பது, வடமொழி சொல். இதற்கு நேர் தமிழ் சொல், “கண்ணேறு” அல்லது “பார்வை படுத்தல்”. eye is the index of the mind என்று சொல்வது போல, எண்ண அலைகளின் வெளிப்பாடு கண்களில் தெரியும். இதை தான் திருக்குறளும் குறிப்பறிதல் என்ற அதிகாரத்தில்

நுண்ணியம் என்பார் அளக்கும் கோல் காணுங்கால்,
கண் அல்லது இல்லை பிற.

என்று தெளிவாக சொல்லி இருக்கும் என்பதை நாம் அறிந்து இருப்போம்.

தனது எதிர்மறை எண்ணங்களை “கண்” வழியே அடுத்தவர்கள் மனதிற்கு “ஏற்று”தல் என்பதை தான் கண்ணேறு என்று அழகு தமிழில் சொல்வதுண்டு..நடைமுறை வழக்கத்தில் இதனை கண்ணடி பட கூடாது அல்லது கண் திருஷ்டி என்று சொல்லுவாங்க.

சரி, இதனை சோதிட ரீதியாக சிந்திக்க எடுத்துக் கொள்வோம். இந்த கண்களுக்கு காரகம் வகிக்கும் கிரகம் எது என்பதை

மாற்றும் “சந்திரன்” மற்றும் அறிவை மாற்றும் “சூரியன்”.தான். அதனால் தான் கண்ணேறு படுத்தல் எளிதாகிறது.

அப்போ இதற்கு என்ன செய்ய என கேட்க தோன்றும். நிறம் தான் இதனை மாற்றி அமைக்கும். அது எந்த நிறம் என்றால் சிவப்பு தான். அதனால் தான் சிவப்பு நிற மிளகாயை கட்டி வைப்பார்கள் சிலர் மிளகாயுடன், உப்பையும் சேர்த்து தலையை சுற்றி நெருப்பில் போடுவார்கள். குறிப்பாக இது போல செய்பவர்கள் செவ்வாய் கிழமை இதனை செய்வார்கள் என்பதை அவரவர்கள் அனுபவத்தில் தெரிந்து இருக்கலாம்.

இந்த சிவப்பு நிறத்திற்கு காரகம் வகிக்கும் கிரகம் செவ்வாய் தான் என்பது உங்களுக்கு தெரிந்து இருக்கும். இந்த செவ்வாய்க்கு அதி தெய்வமாக இருப்பவர் முருகன் என்பது நாம் அறிந்து இருப்போம் இல்லையா.. கண்ணேறு பற்றிய வழிபாடு அல்லது முறையீடு முருகனை தவிர வேறு எந்த தெய்வத்தினிடம் இல்லை..

இந்த கண்ணேறு குறித்த வந்த பாடல் சுப்பிரமணிய தம்பிரான் சுவாமிகள் பாடி அருளிய திருவிருத்தமாகும். அந்த பாடலை உங்களுக்கு பாராயணம் செய்ய தருகிறேன். இந்த பாடலை அநேகமாக பல முருக பக்தர்கள் தெரிந்தோ தெரியாமலோ வழிபாட்டில் பாடி கொண்டு இருப்பார்கள்.

*__“கண்ணேறு”__ வாராது பிணியொன்று சேராது கவலைப்படாது நெஞ்சம்*
*கலியாது சலியாது நலியாது மெலியாது கலி என்ற பேய் அடாது*
*விண்ணேறும் அணுகாது கன்மவினை தொடராது விஷமச்சுரம் வராது*
*வெய்ய பூதம் பில்லி வஞ்சனைகள் தொடரா விஷம்பரவு செத்தும் அடரா*
*எண்ணேறு செனனங்கள் கிடையாது காலபயம் எள்ளளவுமே இராது*
*இவ்வேளைக்கு இரங்கியரு தெய்வம் உனை அல்லாமல்*
*இன்னம் ஒரு தெய்வம் உண்டோ!*
*தண்ணேறு கங்கைமலை மங்கையரு டங்கமே சரசகோபாலன் மருகா*
*சதுமறைகளே தந்த பரமகுரு வாய்வந்த சரவண பவானந்தனே.*

அதனால், கண்ணேறு வாராமல் இருக்க, முருக வழிபாடு ஒன்று மட்டுமே போதும் என்பதை நினைவில் கொள்ளுங்கள். கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள் அல்லது மிளகாய் எல்லாம் மூட நம்பிக்கை என்று வியாக்கியானம் செய்பவர்கள் சிவப்பு நிற அட்டையை அல்லது சிவப்பு நிற காகிதத்தை வீட்டின் வாசலில் ஒட்டி தொங்க விட்டுக் கொள்ளலாம்.

அரசியல் கட்சிகளின் கொடிகளில் கூட இந்த சிவப்பு நிறம் இருப்பதற்கு இது தான் காரணமா என்று கேட்டு விடாதீர்கள். புரிந்தவர்களுக்கு அது புரியும். மற்றவர்கள் தெரியாமல் பயன்படுத்திக் கொண்டு இருப்பார்கள் அவ்வளவு தான்.

சாதாரணமாக பழக்கத்தில் செய்யக் கூடிய இந்த செயலுக்கு ஒரு சோதிட பின்னணி உள்ளது என்பதை தெரிந்து கொள்ளுங்கள். அப்போ திருஷ்டி பொருட்களாக மற்றவைகள் தேவையில்லையா என்று கேட்காதீர்கள் அவைகளை பற்றி இன்னொரு சந்தர்ப்பத்தில் சிந்திக்க வைத்துக் கொள்வோம். கண் திருஷ்டி அல்லது கண்ணேறு வாராது இருக்க இந்த சிவப்பு நிறத்தை கொண்ட எதையும் கட்டி தொங்க விடுங்கள். அத்துடன் தமிழில் உள்ள இந்த சுப்பிரமணிய திருவிருத்தப்பாடலை படியுங்கள். கண்ணேறு வாராமல் வளமாக வாழுங்கள்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 63 -

நாங்களும் செய்யாத முயற்சி இல்லை. எல்லா மேட்ரிமோனிகளிலும் பதிவு செய்து இருக்கிறோம். எங்கள் ஜாதி சங்க இடங்களில் கூட பதிந்து வைத்து இருக்கிறோம். ஆனால் பாருங்க.. எங்க பிள்ளைக்கு பெண் கிடைக்கவில்லை. அல்லது பெண்ணிற்கு வரன் கிடைக்கவில்லை என்று வருந்தி புலம்புபவர்கள் இருக்க தான் செய்கிறார்கள்.

நாங்கள் ஜாதி விவரம் கூட பார்ப்பதில்லை. எந்த ஜாதி மதமானாலும் பரவாயில்லை என்று திறந்த மனதுடன் இருக்கிறோம். எங்கள் பிள்ளைகளுக்கு திருமணம் ஆகவில்லை. அல்லது இத்தனை ஆண்டுகளுக்கு பிறகும் குழந்தை பாக்கியம் கிடைக்கப் பெற வில்லை என்று சொல்பவர்கள் இப்பவும் இருக்க தான் செய்கிறார்கள்.

‘என்னமோ போங்க சார். நான் போறதுக்குள்ள இந்த பேர பிள்ளைகளுக்கு ஒரு கல்யாணத்தை கட்டி பார்க்கனும்னு நினைக்கிறேன்.- ஆனால் பாருங்க ஒன்றும் குதிரவில்லை’ என தனது ஆதங்கத்தை சொல்லி புலம்பும் பெரிசுகளும் இருக்க தான் செய்கிறது.

சரி.. உண்மையிலேயே என்ன தான் பிரச்சனை?. ஏன் இவர்களுக்கு திருமணம் ஆகவில்லை? என்று கவுன்சிலிங் செய்தால் கூட பொதுவாக காரணத்தை சொல்லிவிட முடிவதில்லை என்பது தான் அனுபவ உண்மை. இவர்களுக்கு சோதிட ரீதியாக சில சிந்தனைகளை சொல்லலாம். அதை சொல்வதற்கு தான் இந்த வார சிந்தனை.

தோஷங்கள், சாபங்கள் என சோதிட ரீதியாக சொல்லும் சில வழி முறைகளில், சாங்கியம் செய்தல், பரிகாரம் செய்தல் போன்ற வழிபாட்டு முறைகள் இருந்தாலும் சோதிட ரீதியாக சில விவரங்களை தெரிந்து கொண்டால் நமக்கு சிந்தனை தெளிவாகும் இல்லையா.

இதில் சர்ப்ப தோஷம் அல்லது நாக தோஷம், சர்ப்ப சாபம்

விடுகிறது. அதுவும் கால சர்ப்ப தோஷம் என்று வேறு சொல்லுவார்கள் என்று சொல்ல வருகிறீர்கள் புரிகிறது.

சோதிடத்தில், ராகு கேது என்ற கிரகங்களை சர்ப்பமாக உருவகித்து நமக்கு காட்டி இருப்பார்கள். நிழல் கிரகம், சாயா கிரகம் என்று அவரவர்கள் பழகி வளர்ந்த வழக்கப்படி அவைகளை சொல்லுவார்கள். ஒரு சிலர் இந்த நிழல் கிரகத்தை பொருட்டாகவே கருதாமல் மற்ற கிரகங்களை வைத்து பலன் சொல்லுவார்கள். வேறு சிலர், சர்ப்ப கிரகங்களை மட்டுமே வைத்துக் கொண்டு ஜாதகத்தை பார்த்து சோதிட பலன் சொல்லுவார்கள். இதில் அது சரியா அல்லது இது சரியா என்று சொல்வது நமக்கு நோக்கமில்லை, எனினும் இந்த சிந்தனையில் சொல்ல வந்தது என்ன என்றால் இவை நமது நடைமுறை வாழ்க்கையில் எப்படி நம்மை ஆள்கின்றது என்பதை தெரிந்து கொள்வதற்கே அன்றி வேறு இல்லை.

திருமண தடை, சந்ததி விருத்தி அடையாமை, தொழில் முன்னேற்றம் இல்லாமை, வாழ்வில் வளர்ச்சி இல்லாமை, உழைப்புக்கு ஏற்ற ஊதியம் கிடைக்கப் பெறாமை, நம்முடைய முயற்சிக்கு இன்னொருவர் எதுவுமே செய்யாமல் பெயர் வாங்கி கொண்டு போவது என ஒவ்வொரு கட்டத்திலும் ஏற்படும் தடைக்கும் ஒவ்வொரு அசைவிற்கும் இந்த சர்ப்ப கிரக நிலைகளே முன்னிலை வகிக்கிறது.

அதுவும் கடந்த ஆண்டு நடைபெற்ற சர்ப்ப கிரக பெயர்ச்சியில் தொடங்கி இன்று வரை அதிக துன்பங்களில் அனுபவங்களை பெற்றுக் கொண்டு இருப்பவர்கள் கடக ராசி/இலக்கின அன்பர்கள் தான். இதை படித்துக் கொண்டு இருக்கும் கடக ராசி/இலக்கின அன்பர்கள், கண்களில் நீர் கசிய “ஆமாம்” என்று நிச்சயமாக சொல்லுவார்கள்.

அதிலும் கால சர்ப்ப தோஷம் என்று சொல்லுவார்கள் பாருங்கள் என்று தொடங்கினால் பலருக்கு தலையே சுற்றும். சரி எதுவாக வேண்டுமானாலும் இருக்கட்டும், இந்த சர்ப்ப தோஷம் அல்லது சர்ப்ப சாந்தி பற்றி சொல்லுங்கள் என்று நீங்கள் கேட்க வரும் உங்கள் ஆர்வம் புரிகிறது. அதற்காக தான் இந்த சிந்தனை.

சர்ப்ப தோஷம் என தொடங்கினால், பொதுவாக காளஹஸ்தி திருநாகேஸ்வரம் போன்ற திருத்தலங்களை சொல்லுவார்கள். சர்ப்ப கிரக நிலைகளை கொண்டு அதற்க்கான திருத்தல வழிபாட்டு முறையை செய்தால் அன்றி பூரண பலன் கிடைக்க வாய்ப்பு இல்லை என்பது தான் அவரவர் அனுபவ உண்மையாக இருக்கும்.

இதில் குறிப்பாக சில விஷயங்களை சொல்கிறோம் குறித்துக் கொள்ளுங்கள். ராகு கேது என்ற கிரகத்திற்குள் மற்ற கிரக அமைப்பு இருந்தால் சர்ப்ப நிலைகளுக்கு ஏற்ப அதனை கால சர்ப்ப தோஷம் என்று சொல்லும் முறையும் உண்டு. அதிலும் ஆறு வகை தோஷம் உண்டு. பன்னிரண்டு வகை சாபம் உண்டு. அதிலும் கொடி பிடித்து செல்லும் கிரகம் ராகுவா? கேதுவா? என்பதை ஒட்டி சொல்லும் முறையும் உண்டு.

மற்ற கிரகங்கள் வலவோட்டாக (clockwise) செல்லும் போது, சர்ப்ப கிரகங்கள் மட்டும் எதிர் திசையில் (anticlockwise) செல்லும் என்பதை தெரிந்து கொள்ளும் போதே, இந்த கிரக பாதிப்புகளை நம்மால் புரிந்து கொள்ள முடியும் இல்லையா!

குடும்பத்தில் வளமும் அதிர்ஷ்டமும் பெருகிட, நீர்வளம், நீடித்த ஆயுள், நிறைந்த செல்வம் ஆகியவற்றைத் தரும் தெய்வ வழிபாடு நாக வழிபாடு தான். சிலருக்கு குல தெய்வமே நாகமாக இருக்கும். சிலர் குடும்ப சூழல் காரணமாக இதனை மறந்து வேறு ஒரு தெய்வத்தை வணங்கி கொண்டு இருப்பார்கள். இவர்களுக்கு சர்ப்ப சாபம் ஏற்பட்டு பல தடைகள் வந்து கொண்டு இருப்பதை அனுபவத்தில் அவரவர்கள் தெரிந்து இருப்பார்கள்.

முயற்சியில் தடை என்றால் அங்கே முதலில் வந்து நிற்பது இந்த சர்ப்பங்கள் தான் என்பதை புரிந்து கொள்ளுங்கள். கிராமத்து பக்கங்களில் ஒரு நல்ல காரியம் பேசும் போது, பாம்புகள் தென்பட்டால், அந்த செயலை இப்பவும் தொடர மாட்டார்கள் என்பது தான் அனுபவ உண்மை.

ஆனால் பாருங்கள், பாம்புகளால் விவசாய நிலம் வளம்பெறுகிறது. பாம்புகளை வழிபடுவதால் தங்கள் குடும்பத்தில் செல்வவளம் பெருகி நிலைக்கும் என்று மக்களிடையே நம்பிக்கை நிலவுகிறது. அந்த நம்பிக்கையின் அடிப்படையில்தான் கோவில், குளக்கரை அல்லது அரச மரத்தடி போன்ற இடங்களில் பாம்பு வடிவம் செதுக்கப் பட்ட கற்கள் நடப்பட்டு வழிபாடுகள் நடத்தப்படுகின்றன. நாகராஜாவை தெய்வமாக வழிபடும் வழக்கம் காலம்காலமாக தொடர்ந்து வந்துள்ளது.

பஞ்சமி திதி அன்று நாக வழிபாடு என்பதால் தான் விவசாய நிலங்களை பஞ்சமி திதி அன்று உழவு செய்ய கூடாது என்ற சம்பிரதாயமும் உண்டு. குறிப்பாக நாக பஞ்சமி அன்று குடும்ப வளர்ச்சி கருதி செய்யவே கூடாது என்பது தான் இந்துக்களின் வழிபாட்டு முறை. ஆடிமாத வளர்பிறை பஞ்சமி தான் நாக பஞ்சமி என்பதை நம்மில் பலர் அறிந்து இருக்கலாம்.

பாயசம் வைத்து நைவேத்திய வழிபடும் முறையே நாக வழிபாட்டின் அடிப்படை என்பதில் தான் என்றால் ஆச்சரியமாக இருக்கும். இதிலும் அஷ்ட நாகங்களாகிய அனந்தன், வாசுகி, தட்சகன், கார்க்கோடகன், பிங்களன், சங்கன், பத்மன், மஹாபத்மன் இவைகள் இன்னமும் பூமியில் வாழ்வதால், நாக வழிபாடு மக்கள் மத்தியில் பூஜிக்கும் தெய்வமாக கருதப்படுகிறது. இந்த நாக வழிபாடு மற்றும் சிந்தனைகள் சமணத்திலும் பௌத்தத்திலும், கிருத்துவத்திலும் கூட உண்டு. சில குடும்பங்களில் நாகத்தை சொல்லி பெயர் வைத்து இருப்பார்கள். ‘நாக’ராஜன், ‘நாக’லட்சுமி, ‘நாக’நாதன், ‘நாக’சௌந்தரம், ‘நாக’சுப்பிரமனியன் என்பது போல.

காஞ்சிபுரத்தில் உள்ள முருக பெருமான் கோவிலில் நாக சுப்பிரமணிய சன்னதியே உண்டு என்றால் வியப்பாக தான் இருக்கும். இந்த திருக்கோவிலில் நவ கிரகங்கள் அனைத்தும் சூரியனுக்கு பின் புறத்தை காட்டியபடி, அதாவது நம்மை பார்த்தபடி

என்பதை இந்த சர்ப்ப கிரக சிந்தனையில் சேர்த்துக் கொள்வது அவசியம்.

அறிவியல் ரீதியாக சொல்ல வேண்டும் என்றால், சுமார் 3600க்கும் மேற்பட்ட பாம்புகள் உள்ள இந்த உலகில், முட்டையிட்டு மட்டுமல்ல, குட்டி போட்டும் இனப்பெருக்கம் செய்வது இந்த பாம்பு இனம் மட்டுமே என்பதை தெரிந்து கொள்ளுங்கள்.

பாம்புகளை பற்றி இவ்வளவு விஷயம் இருக்குதா? இதை எப்படி சோதிடத்தில்.... என்று யோசிக்கிறீர்கள், புரிகிறது. இதன் தொடர்ச்சியை அடுத்த வார சிந்தனையில் தொடர்வோம்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 64 -

சத்தியத்திற்கு கட்டுப்படும் நாக பாம்பு, உருவத்தில் தடித்த கட்டுவிரியன், கண்ணை கவரும் தோற்றத்தில் இருக்கும் கண்ணாடி விரியன், அளவில் சிறிய சுருட்டை விரியன் என்ற நான்கு வகை பாம்புகள் தான் விஷ தன்மை கொண்டவை என்பதை வனவியலாளர்கள் சொல்லுவார்கள். பாம்புகள் அடித்தாரை கடிக்காது, விதித்தாரை தான் கடிக்கும் என்று சொல்லுவார்கள். என்ன தான் இருந்தாலும் பாம்பு என்றால் பயம் இருக்க தானே செய்யும்.

ஒரு ஜாதகத்தில் நாக தோஷம் இருப்பவர்களுக்கு, அற்ப ஆயுள், வம்ச நாசம், தீராத வியாதி, தரித்திரம், நோய் தொல்லைகள் என ஏற்பட வாய்ப்புண்டு. என்பதை சென்ற வாரம் பார்த்தோம்.

மனித வாழ்வில் மிக முக்கிய அம்சமான திருமண விஷயத்திலும், குழந்தை பாக்யம் அருள்வதிலும் தோஷத்தை ஏற்படுத்துவது இந்த ராகு கேதுதான். நாக தோஷம், சர்ப்ப சாபம், என பல வகைகளில் தோஷங்களை ஏற்படுத்துவதில் ராகு-கேதுவுக்கு நிகர் யாரும் இல்லை எனலாம். குழந்தை பிறக்கும்போது கழுத்தில் மாலை போட்டுக்கொண்டு பிறப்பது, கொடி சுற்றிக்கொண்டு பிறப்பது எல்லாம் ராகு-கேதுவின் செயல்பாடுகள் என்றால் வியப்பாக தான் இருக்கும்.

சர்ப்ப ஷாந்திக்கான வழிபாட்டு முறைகள் திருத்தலங்கள் மாவட்டம் தோறும் இருக்கிறது. காளஹஸ்தியும் திரு நாகேச்வரமும் மட்டும் அல்ல என்பதை முதலில் தெரிந்து கொள்ளுங்கள். எந்த வகையான தோஷம் இருக்கிறது என்பதை உங்கள் நம்பிக்கைக்குரிய சோதிடரிடம் இருந்து கேட்டு தெரிந்து

இது இல்லாமல் ஏதாவது ஒரு நாக வழிபாடு செய்தால், வழிபாட்டுக்கு பலன் கிடைக்கும், தோஷ நிவர்த்தி என்பது அதற்குரிய கால இடைவெளியில் தான் நடக்கும். அதன் பிறகு வழிபாட்டு முறைகளை குறை சொல்வது பயனற்றது என்பதை அறிவார்ந்தவர்கள் ஏற்றுக் கொள்வார்கள்.

பாம்புகளின் இயல்பான குணங்களை வைத்து இதை சிந்தித்தால் இது தெளிவாக புரியும். எப்போதும், பாம்புகள் முன் எச்சரிக்கை உள்ளவை தலையை நீட்டிக் கொண்டு வாலை உள்ளே இழுக்கும் திறன் படைத்தவை. பசித்தால் மட்டும் சாப்பிடும் பாம்பு, பாம்பையே சாப்பிடும் பாம்பு, கர்ப்பம் தரித்து பிள்ளை பெறும் பாம்பு முட்டை இட்டு சந்ததியை விருத்தி செய்யும் பாம்பு என பட்டியலிட்டு சொன்னால் ஒரு சில வாரம் போதாது.

இதே சிந்தனையில் நாக தோஷம், சர்ப்ப சாபம் என சொல்ல தொடங்கினால் தனியாக தொடரே எழுதலாம் என்றாலும், எனக்கு நாக தோஷம் இருக்கிறதா என்பதை எப்படி தெரிந்து கொள்வது என கேட்க நினைப்பவர்களுக்கு இந்த செய்தி.

தோல் சம்பந்தப்பட்ட வியாதி இருப்பவர்களுக்கு சர்ப்ப தோஷமோ சர்ப்ப சாபமோ இருக்கும் என்பதை ஜாதகத்தை பார்க்காமலே சொல்லி விடலாம். தோல் மருத்துவர் dermatologist என்று சொல்லும் தோல் மருத்துவ நிபுணர்களுக்கும் இந்த சர்ப்ப தோஷம் இருக்கும் என்று சொல்லி விடலாம்.

தமிழ் வழி வழிபாட்டு முறையில், சர்ப்ப தோஷம் இருப்பவர்கள் புகழேந்தி புலவர் எழுதிய நளவெண்பாவை படிக்க வேண்டும். 'கார்கோடகன்' முதலான நாக தோஷம் நீங்கும்.

பாம்பன் சுவாமிகள் அருளிய துவித நாக பந்தம் படிக்க தோஷங்களும் பாபங்களும் விலகும். இதே போல நாக தோஷ அமைப்பிற்கு ஏற்ப முன்னாக பந்தம், நான்னாக பந்தம், அஷ்ட நாக

பந்தம் முதலியனவும். தோஷ பாதிப்பு ஏற்படாமல் இருக்க, தாந்திரிக முறை பரிகாரங்களும் உண்டு.

இதே போல, அஷ்ட புஷ்பங்களில் முதன்மையாக சொல்லும், எருக்கு வழிபாடு சர்ப்ப சாபத்தை போக்கும் என்பது நம்மில் பலருக்கு தெரிந்து இருக்க வாய்ப்பு இல்லை.

உணவு பழக்கத்தில், பால் பொருட்கள் (dairy foods) நீங்கிய உணவு எடுத்துக் கொள்வது சர்ப்ப தோஷத்திற்கு எளிமையான பரிகாரமாக இருக்கும். இது போல ஒவ்வொரு அசைவிலும் சில குறிப்புகள் உண்டு அதை உங்கள் நம்பிக்குரிய சோதிடர் உங்களுக்கு அடையாளம் காட்டி தருவார்.

இன்னும் குறிப்பாக சொல்ல வேண்டும் என்றால், நாக தோஷம் உள்ளவர்களுக்கு சனியினால் பாதிப்பு ஏற்பட்டால், அது அஷ்டம சனியாகவோ, ஜென்ம சனியாகவோ, ஏழரை சனியாகவோ, அல்லது சனி பெயர்ச்சியால் வரும் பாதிப்போ, அல்லது சனி திசை புத்தி இப்படி இருந்தாலோ, அது பலமாக மற்றவர்களை விட தாங்க முடியாத நிலையில் இருக்கும்.

அட என்னங்க அய்யா தமிழில் பாட்டு பாடினால் பாம்பு தோஷம் போயிடுமா என்று கிண்டல் அடிப்பவர்கள் குறித்துக் கொள்ளுங்கள். கொஞ்சம் நீரும் தமிழ் பாட்டும் போதும் மற்ற சடங்குகள் எல்லாம் பிறகு தான். இதற்கான குறிப்புகளை இந்த சிந்தனையை இன்னொரு வாய்ப்பில் சிந்திக்க வைத்துக் கொள்வோம்.

இராமேஸ்வரம், திருச்சி, ஈரோடு, கொடுமுடி, செம்மங்குடி, காரைக்குடி, பரமக்குடி, தூத்துக்குடி, மன்னார்குடி, என மாவட்டம் தோறும் சர்ப்ப சாந்திக்கு தனியாக புத்தகம் போடும் அளவுக்கு திருத்தலங்கள் உள்ளது. வழிபாட்டு முறைகள் உள்ளது. அதனால், உங்கள் நம்பிக்கைக்குரிய சோதிடர் ஜாதகத்தில் உள்ள தோஷங்கள்

தலங்களையும், வழிபாட்டு முறைகளையும் அறிந்து அதன்படி செய்து நிவர்த்தி பெறுங்கள்.

பொதுவாக ஜாதாகத்தில் உள்ள எந்த பாவங்களையும், தோஷங்களையும், சாபங்களையும் பொறுத்துக் கொள்ளலாம். ஆனால் சர்ப்ப கிரகத்தினால் வரும் தோஷங்களையும் சாபங்களையும் பொறுத்துக் கொள்ள முடியாது என்பது தான் அவரவர் அனுபவமாக கடந்தகால நிகழ்வுகள் நமக்கு கற்று தந்த பாடமாக இருக்கும்.

சரிங்க ஐயா, ஒரு சர்ப்ப கிரகத்திற்கே இத்தனையா...? இது போல எல்லா கிரகத்திற்கும் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வமாக இருக்கிறது என்று சொல்பவர்களுக்கு ஒரு செய்தி. சர்ப்ப கிரகத்தை பற்றிய செய்திகள் இத்துடன் முடியவில்லை.. இது எல்லாம் ஒரு சிறு குறிப்பு அவ்வளவு தான். சர்ப்ப கிரகத்தின் நிலைப்பாட்டை கொண்டு நிறையா செய்திகள் சொல்ல முடியும்.

நீங்களே தெரிந்து கொள்ள சில குறிப்பு தருகிறேன். சரியாக உள்ளதா சொல்லுங்கள். சர்ப்ப கிரகங்கள் இருக்கும் இடத்தில் இருந்து, மூன்றாவது ஸ்தானத்தில் சூரியன் இருந்தால் ஆணாக இருந்தால் வழுக்கை (சொட்டை) தலையாக இருக்கும் பெண்ணாக இருந்தால் தலை சீவினாலே முடி கொட்டும். சாதாரணமாகவே முடி உடைந்து விழும் தன்மையதாக இருக்கும்.

சர்ப்ப கிரகங்கள் தனியாக இருந்தால், வாழ்க்கையில் ஆயிரம் இருந்தும் வசதிகள் இருந்தும், ஒரு இனம் புரியாத வெறுமை இருக்கும்.

சர்ப்ப கிரக அச்சில் குரு தனித்து இருந்தால் குடும்பத்தை விட்டு விலகி இருப்பார். இதில் சனி தனித்து இருந்தால், தொழில் முறையாக குடும்பத்தை விட்டு விலகி இருப்பார். இந்த ஜாதகர் தோஷ பரிகாரங்கள் செய்வாரா மாட்டாரா என்பதையே சர்ப்ப கிரக

நிலைகள் காட்டிக் கொடுத்து விடும். இப்படி நிறைய சொல்லிக்கொண்டே போகலாம்.

எந்த காரணத்தைக் கொண்டும் சர்ப்ப சாபம், நாக தோஷம், இவைகளை அப்புறம் பார்த்துக் கொள்ளலாம் என கவன குறைவாக கொள்ளாமல், முறையான வழிபாட்டு முறைகளை, பரிகார முறைகளை உங்கள் நம்பிக்கைக்குரிய சோதிடர் வழிகாட்டுதலின்படி செய்து, அப்படி செய்ய வாய்ப்பு இல்லாதவர்கள் தமிழ் பாடல்களை படித்து, பிரச்சனைகளை சந்திக்கும் முன்பாக தற்காப்பு செய்து கொள்வது நல்லது.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# ஆசிரியரின்

## மக்கள் மனம் கவர்ந்த நூல்கள்.

இந்த புத்தகங்களை, ஆன்லைனில்,

அமேசான், விக்கிமீடியா, மின் நூலகம் மற்றும் ஆடியோ புத்தகமாக Channel G podcastல் கேட்கலாம்.




இந்த புத்தக கட்டமைப்புக்கு
பணம் தந்து உதவலாம்.
இது இன்னும் புத்தகம் வெளிவர
ஊக்கம் அளிக்கும்.

# ஆசிரியர் குறிப்பு

விசு அய்யர், தமிழ்நாட்டில் உள்ள வீரம் செறிந்த பசும்பொன் முத்துராமலிங்க தேவர் மாவட்டத்தில், சிவகெங்கை சீமையில் இந்துக்களால் சிறப்பாக கொண்டாடப்படும் ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி நன்னாளில், இன்று உலக எழுத்தறிவு தினமாக கொண்டாடப்படும் தினத்தில் தோன்றியவர்.



வரி சட்டத்தில் முதுகலை பட்டம் பெற்றவர். பள்ளி நாள் முதல் தொடர்ந்து சிறந்த மாணவனாக தேர்ந்து எடுக்கப்பட்ட இவர் பன்மொழி திறமை பெற்றவர். இவர் இந்திய அளவிலான நினைவு திறன் போட்டியில் பரிசு பெற்றவர். தேசிய அளவிலான அதிவேக தட்டச்சு போட்டியில் வெற்றி பெற்றவர். “சித்தாந்த ரத்னா”, “திருவருட் செல்வர்”, “கைரேகை கலைஞன்” போன்ற இவர் பெற்ற பாராட்டுக்களும் நன்மதிப்பும் பெருமைக்கு உரியன.

இன்று வரை உண்மையான பிரம்மச்சரிய வாழ்க்கையில், உணவிலும், உணர்விலும் இயற்கையோடு இனைந்து வாழும் சீரிய ஒழுக்கத்தை கொண்டவர். பெரியபுராணம், திருக்குறள், மற்றும் சைவ திருமுறைகளில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்ட இவர் சமய இலக்கியங்களில் பல ஆய்வு கட்டுரைகளை பதிப்பித்து உள்ளார்.

பன்முக திறமை கொண்ட இவர் எழுதிய சோதிடம் அல்லாத புத்தகமும், சோதிட புத்தகங்களும் வார இதழில் எழுதும் தொடர் கட்டுரைகளும் வாசகர்கள் நெஞ்சத்தை கிள்ளி செல்லும்..சென்னை அரிமா சங்கம், சென்னை சுழற் சங்கம், அறிதுயில் சங்கம் மற்றும் குடும்ப நற்பணி மன்றம் போன்ற பல இடங்களில் பல்வேறு தலைப்புகளில் உரை நிகழ்த்தி உள்ளார்.

உடலாலும் உள்ளத்தாலும் சீரிய ஒழுக்கத்தினாலே இன்றும் சொல்லிலும் செயலிலும் இளைஞனாகவே இருக்கின்றார். சொந்த வாழ்க்கையில் மட்டுமின்றி, நடைமுறை வாழ்க்கையிலும் ஒரு ஒழுக்க முறையினை செயல்படுத்தும் இவர் கையில் திருக்குறளும், பையில் திருநீறும், மெயில் உருத்திராக்கமும் இருக்கும் என்பதே இவரின் எளிய அடையாளம்.

